# பாவை



## மாலா மாதவன்

விளக்க உரை : சந்தக்கவி இராமஸ்வாமி

# பாவை



## மாலா மாதவன்

விளக்கவுரை :

சந்தக்கவி ஸ்ரீமான் இராமஸ்வாமி அவர்கள்


பாவை
கவிதைகள்
மாலா மாதவன்
வெளியீடு : ஏப்ரல் 2019
பக்கங்கள் : 72
விலை : மதிப்பிட இயலாதது

நூலழகு : பாலகணேஷ்




Paavai
Poems
Mala Madhavan
Released on : April 2019
Pages : 72
Price : Priceless

ஓம் நமோநாராயணா:
ஸ்ரீ கோதாயை நம:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:

## ‘பாவை’ உருவான கதை

ஓவியர் திரு. கேசவ் வெங்கட்ராகவன் அவர்கள் ஹிண்டு நாளிதழின் துணையாசிரியராகவும், கால் நூற்றாண்டுக்கும் மேலாக அவ்விதழில் கருத்துப்படம் வரைபவராகவும் உள்ளார். அவரைப்பற்றி அறியாத தமிழர் இருக்க வாய்ப்பில்லை.

அவர் முகநூலில் (facebook) தினமும் பதிவிடும் படங்கள் ஒவ்வொன்றும் ஒன்றையொன்று மிஞ்சும் அழகுடையன. அவரது தூரிகை பேசும் மொழியில் கண்ணனே நேரில் வந்து அமர்ந்தாற்போல் நாம் உணர்வோம். ஒவ்வொரு நாளும் அவர் வரையும் படம் எனது கிருஷ்ணபக்தியைத் தூண்ட, அத்தூண்டுதல் நெய்யாய் உருகி, ஒளியாய் வளர்ந்து, என்றும் கிருஷ்ணனாக, எதிலும் கிருஷ்ணனாய், தினம் ஒரு பாடல் பதிந்து வந்தேன். அவ்வாறே 2018 ஆம் ஆண்டு மார்கழி மாதம் முப்பது நாட்களும் அவர் வரைந்த திருப் படங்களுக்கும் பாடல் எழுதினேன்.

ஸ்ரீ ஆண்டாள் பாடியது “திருப்பாவை”. நானிங்கு கிருஷ்ணன் மேல் கொண்ட ப்ரேமையால் பாடியதிப் “பாவை”

இப் பாவைப் பாடல்களுக்காய்ப் படங்கள் வேண்டி அவரை அணுகிய பொழுது, தமிழுக்காகத் தம் படங்களை இலவசமாகக் கொடுத்தார். அவருக்கும், அவர்தம் சகோதரருக்கும் என் மேலான நன்றி. இப்படங்கள் பேசும் மொழியை வெண்பாவாக எழுதிவிட்டு, படம் இல்லாப் பாக்களாய் அவற்றைத் தத்தளிக்கவிடக் கூடாதன்றோ.. அவர்கள் உதவிக்கு முன் என் நன்றி என்ற சொல் மிகவும் சிறியதே.

என் குருவான... ஸ்ரீமான் சந்தக்கவி ராமஸ்வாமி அவர்கள் இப் பாடல்களுக்கு முன்னுரையும், விளக்கவுரையும் எழுதி இருக்கிறார்.

ஸ்ரீரங்கத்தில் வசிக்கும் இவர் மன்னார்குடியில் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் ஒரு நடமாடும் தமிழ்க்கடல். தமிழிலும், வடமொழியிலும், புராணஇதிகாசங்களிலும் மிகத் தேர்ந்தவர். சந்த வழிப்படி தமிழ்ச் செய்யுட்களை வகைப்படுத்தி ஆய்வு செய்தவர். பெரியபுராணம், கூரத்தாழ்வான் சந்தங்கள், பிரபந்தத்தில் நாற்பது சந்தங்கள் எனச் சந்த முறைப்படி திருத்திப் பதிப்பித்துள்ளார். தமிழுக்கும், வடமொழிக்கும் பொதுவான சந்தங்களை உள்ளடக்கிய “சந்த சாத்திரம் விருத்த இலக்கணம்” என்கிற நூலைச் சமீபத்தில் வெளியிட்டு உள்ளார்.

அன்னாரது அறிமுகமும், மேலான வழிகாட்டுதலும் முகநூல் வழியாகக் கிடைத்ததை நான் பெற்ற பேறாகக் கருதுகிறேன். நான் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத எட்டாத உயரத்தில் இருக்கும் அவர், அவரிடம் பயின்ற மாணவியாகிய என்னுடைய எளிய பாடல்களுக்கு உரை எழுதிப் பெருமைப் படுத்தியது நான் செய்த தவப்பயனே. நன்றி என்று ஒரு வார்த்தையில் கூறமுடியாதே. பூர்வஜென்ம புண்ணிய பலன்.

இச்சமயம் நான் தமிழ் மேல் கொண்ட காதலையும் குறிப்பிட்டே ஆக வேண்டும். பள்ளி மற்றும் கல்லூரியில் ஒரு பாடமாகத் தமிழ் படித்து அதன் அழகில் மயங்கிக் கவிதைகள் வடித்தாலும் அவை குறிப்பேட்டுடன் நின்ற எழுத்தாய் மாறிவிட்டன. அதன்பின் இந்த முகநூலால் பெரும் பாக்கியம் பெற்றேன். “வா! வெண்பா கற்கலாம்“ என விளையாட்டாய் ஆரம்பித்த குழு ஒன்றில் எனது தோழிகள் திருமதி கீதா சுதர்சனம், திருமதி ரேவதி வெங்கட் இருவரும் உற்சாகமாய்க் கற்றுக் கொடுக்க, முழு முனைப்புடன் இறங்கி எதுகை, மோனையெல்லாம் சரிபார்த்து ஓரளவு எழுத வந்தவுடன் தினமும் பயிற்சிபோல் வெண்பா எழுதிக் “கிருஷ்ணார்ப்பணம்“ செய்து வந்தேன். இடையில் சந்தக் குழுவும் ஆரம்பித்து, ஸ்ரீமான் சந்தக்கவி ராமஸ்வாமி அவர்களின் மேலான தலைமையின் கீழ் நண்பர்களுடன் நானும் பங்குகொண்டு எழுதிய விருத்தங்கள் ஓர் இணைப்பாக , ஸ்ரீமான் சந்தக்கவி ராமஸ்வாமி ஐயாவின் ஆராய்ச்சித் தொகுப்புடன் “சந்த சாத்திர விருத்த இலக்கணம்“ என்ற நூலில் இடம்பெறும் பேறு பெற்றன.

முகநூலில் ஆர்வத்துடன் எழுதிய பாவைப் பாடல்களைப் புத்தக வடிவில் கொண்டுவர நண்பர்கள் மற்றும் குடும்பத்தினர் ஊக்குவிப்பே காரணம். இப்புத்தகத்தின் பின்புலமாக இருக்கும் எனது கணவர், குழந்தைகள், பெற்றோர், தமையன் மற்றும் என் நண்பர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படைப்பை அச்சுக்குக் கொண்டுவந்து அனைவர் கரங்களிலும் தவழச் செய்த மதிப்பிற்குரிய திரு.கணேஷ்பாலா அவர்களுக்கும், புத்தகம் பற்றி அழகாய்க் கருத்துரை அளித்த திரு.ரிஷபன் ஸ்ரீனிவாசன் அவர்களுக்கும், அணிந்துரை அளித்துப் பெருமைப்படுத்திய ஸ்ரீவில்லிபுத்தூர் வேதபிரான் பட்டர் ஸ்ரீமான் அனந்த ராம கிருஷ்ணன் அவர்களுக்கும் என் மேலான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மாலா மாதவன்**



# நம்மாண்டாளின் புதிய 'பாவை'

சுமார் 1300 ஆண்டுகளுக்கு முன் பூமிப் பிராட்டி, ஸ்ரீகோதை எனும் ஸ்ரீஆண்டாளின் திருப்பாவை என்ற பிரபந்தம் தோன்றியது என்பர். உலக உயிர்களைக் கடைத்தேற்றுவதற்காகப் பாடப்பட்டதைப் பாரே அறியும்.

அனைத்துயிர்களும் பெண்மையே. புருஷோத்தமன் ஒருவனே ஆண்மகன். அவனை அடைவதே நோக்கம் என்ற தத்துவத்தின்படி அடைவதற்குரிய மிக எளிய வழிகாட்டியதே இப்பாவைநோன்பு.

வடக்கே எளிய ஆய்ச்சிறுமிகள் காத்யாயினி (காளி) நோன்பிருந்து கண்ணனை அடையலாம் என்று காட்டியதை, தமிழகத்தில் ஸ்ரீபெரியாழ்வார் குலத்துத் தோன்றி, நிருபித்த ஸ்ரீஆண்டாள், மற்றவரும் உய்யப் பாடியதே சங்கத் தமிழொத்த இப்பாவை முப்பது பாசுரங்களாகும்.

தற்போது அவர் வமிசத்து உறவான மாலா என்ற அவர் பெயர் தாங்கிய மாலா மாதவனின் புதிய பாவையும் அனைவரையும் கண்ணனை அடைய வழிகாட்டு முகத்தான் அமைந்ததேயாகும்.

"பாவை" என்ற பதுமை வழிபாடு வடக்கே காத்யாயினியை மண்பதுமையிலமைத்து வழிபட்டதை உணர்த்தும். பாவை என்பது ஆய்ச் சிறுமிகளாகிய பாவையர்களையும் உணர்த்தியது. கோதை பாடிய பாவை, அதாவது பாக்களையும் உணர்த்தித் திருப்பாவையானதோ. இங்கு மாலா என்ற கோதையின் பாக்களையும் உணர்த்தும்.

ஸ்ரீஆண்டாளின் பாவை எனும் நூல் தரவு கொச்சகம் என்ற பாவகையாகும். அதுவும் எட்டடித் தரவாகும். எட்டடியும் ஓரெதுகை கொண்டது. வெண்டளை மட்டுமே கொண்ட தரவாகும்.

நம்மாண்டாள் மாலா பாடியது நான்கடி இன்னிசை வெண்பாவாகும். வெண்டளையே இதற்கு உயிர். ஒன்று அல்லது இரண்டு அடியெதுகை பெற்றது இப்புதிய பாவை. (எம் சந்த வகுப்பு மாணவியாதலால் இன்னிசை வெண்பாவைத் தேர்ந்தெடுத்தார் போலும்).

அக்கோதைப் பாசுரம் ஒவ்வொன்றும் 32 சீர்கள் கொண்டன. இக்கோதைப் பாடலில் ஒவ்வொன்றிலும் 15 சீர்களே பாட முடியும்.

எனவே இதற்குள் சொல்ல வந்ததைச் சுருக்கிச் சொல்ல வேண்டும். பாவைக்கிலக்கணம்போல அமைந்த "ஏலேரோர் எம்பாவாய்" என்ற தொடர் இச்சுருங்கிய பாடலில் குறிப்பினாலேயே கொள்ளல் வேண்டும்.

இப்புதிய பாவையில் தற்செயலாக அமைந்த ஒன்றைக் குறிப்பிட வேண்டும். ஸ்ரீ ஆண்டாளின் பாசுரத்தில், ஓரிடம் வெண்டளை பிறழ்ந்துளது. இதனைத் தவறு எனல் பாவமாகும். பெருமானின் பத்தினி வாக்தேவியே. வாக்கில் பிழை வருமோ. அப்படி இருப்பினும் தெய்வக் கவிஞர் பாடற் பிழைகளை ஆரிடம் (ஆர்ஷம்) என்பர். தவறாகாது. (இதுபற்றி எம் சந்தசாத்திர நூலுள் காண்க). எனவே இது பதிப்பாளர் செய்த பிழையே. 16ஆம் பாசுரத்தில்

"நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய கோயில்"... என்ற இடத்தில், "நந்தகோ பன்னுடைய" என்றிருந்தால்தான் வெண்டளை தவறாது.

இல்லையேல் ஆசிரியத் தளை வந்து பிழையானதாகும். இதனை வேறு எம்முறையில் பிரித்தாலும் தளை தட்டும்.

பதிப்பாளர் "பன்னுடைய" என்றதை "பனுடைய"" எனத் தவறாகப் பதிப்பித்துத் தவறினர். இன்றுவரை யாராலும் திருத்தப்படவில்லை. இஃது ஓசைக்காக விரித்தல் விகாரம் என்ற ஸ்ரீஆண்டாள் உணர்ந்து பாடியதை, மாற்றியதால் ஏற்பட்டதே. (செய்யுள் விகாரங்கள் ஓசைக்கே என்றதையும் என் சந்தநூலுள் காண்க) . எனவே பிழையற்றதைப் பிழையாக்கினர்.

இதைப் போலவே இப்புதிய பாவையில், மாலா பாடியதில் 7ஆம் பாடலில் ஒரே ஓர் இடத்திலே மட்டும் தளை தட்டியது தெய்வச் செயலே. கத்தும் பறவை கானமும் என்பதில் பறவை கானமும் என்றதால் வெண்டளை தட்டியது. ஆசிரியத் தளை அமைந்தது. இதனைப் பறவைகள்கானமும் எனத் திருத்தினேன். வெண்டளை பிறழவில்லை. மற்ற இருபத்தியொன்பது பாடல்களிலும் வெண்டளை பிறழாமல் மாலாவும் பாடியது பாராட்டிற்குரியதே.

மிக விரிவான நயஉரைகள் கூறின் பக்கங்கள் போதா என்பதால் சுருங்கிய உரையே வரைகிறேன். ஸ்ரீரங்கத்தில் இருக்கும் பொழுதே மாலாவின் வேண்டுகோள் வந்தும் எழுத இயலவில்லை. இங்கு உடுப்பி வந்த பின்னரே கிருஷ்ணனே, மாலைக்கு மயங்கி எழுத வைக்கிறான் போலும்.

சந்தக்கவி

இராமஸ்வாமி



ஓம் நமோ நாராயணா:
ஸ்ரீ கோதாயை நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரியாழ்வார் திருவம்சம்
ஆச்சார்ய பீடம்
**வேதபிரான்பட்டர் கோ. அனந்த ராம கிருஷ்ணன்**
நாச்சியார் திருமாளிகை

---

**கோ**தை என்ற பாவை பாடிய திருப்பாவைக்கு இப்பாவை அழகிய பாமாலை பாடியிருக்கிறார். வாசித்து அகமகிழ்ந்தோம். அழகான பாடல்கள். திருப்பாவையை ஒட்டி பாடல்கள் கருத்தாய் அமைந்தது அற்புதமே. ஆண்டாளின் அருளே.!

ஸ்ரீஆண்டாள் தம் திருப்பாவை பாசுரத்தில் "குறையொன்றுமில்லை கோவிந்தா" என்று எம்பெருமானை மங்களாசாசனம் செய்கிறார். கோவிந்த பட்டாபிஷேகம் செய்த பின்பு முதல் திருநாமம் சொல்லுகை குற்றமிறே என்று திருப்பாவை வ்யாக்யானத்தில் ஸ்வாமி பெரியவாச்சான் பிள்ளை சாதிக்கிறார்.

ஆயர்களின் ஹ்ருதயத்தில் , எப்பொழுதும் நீங்காது நிறைந்த கோவிந்தனை , அவனது நாமாவை அழகிய இப்பாமாலையில் அற்புதமாகப் பல இடங்களில் குறிப்பிடுகிறார்.

பாவை என்ற இப்புத்தகத்தை எழுதிய ஸ்ரீமதி மாலா மாதவன் அவர்களும் , விளக்கமாய் , நயத்துடன் விரிவுரைகள் தந்து பாடலைப் பெருமைப் படுத்தியிருக்கும் சந்தக்கவி ஸ்ரீமான் ராமஸ்வாமி அவர்களும் பல்லாண்டு பல்லாண்டு இதைப் போல் பல கைங்கர்யங்கள் செய்ய வேண்டும் என ஸ்ரீகோதா சமேத ராஜகோபால ஸ்வாமி திருவடிகளைப் பிரார்த்திக்கிறோம்.

அநேக மங்களாசாசனங்களுடன்,
**கோ. அனந்த ராம கிருஷ்ணன் .**
வேதபிரான்பட்டர்.

## பாவைமொழி - 1

**தேடக் கிடைக்காத தெள்ளமுதே! தேன்சுவையே!**
**சேடன் அணையானே! சேர்ப்பாயோ என்மாலை!**
**பாடி அழைத்தேனே: பாவையின் நோன்பிதுவே!**
**கூடிக் குளிர எழு**

சந்தக்கவியார் உரை :

ஸ்ரீ கோதை நாச்சியாரின் நயவுரைகளை எத்தனையோ ஆசாரியர்கள் வரைந்துள்ளனர். எனவே இக்கோதா மாலையாரின் உரைநயங்களையே சுருக்கிக் கூறுவேன்.

தெள்ளமுது என்று கண்ணனைக் கூறியது தேவர் உலகத்தோர்க்கே. தேன்சுவையே என்றது மற்றைய மண்ணுலகத்தார்க்கே. ஆக அனைத்து உலகங்களுக்கும் இவனே மேலான பரம் என்று காட்டி, அவனை அடையும் வேட்கையை அனைவருக்கும் ஏற்படுத்தி அவனைத் தவிர அனைவருமே ஜீவாத்மாக்கள். அனைவரும் அவன் அடிமைகளே. எஜமானன் அவனே. அவனை அடைவதே பேரின்பம் என்பதற்காக முதலில் இன்சுவைப் பொருள் கூறித் தூண்டி விடுகிறார்.

இப்படி ஆவலைத் தூண்டினாற்றான் நோன்புக்குரிய வைராக்யம் தோன்றும் என்பதை உணர்த்தியது அழகே. சேடன் அணையானே என்றது அவனிருப்பிடம் கூறியதே.

மார்கழி மாதம்தான் சிறந்தது என்று காட்ட கூடிக் குளிர எழு என்றதால் ஸ்ரீ ஆண்டாளைப் போலக் கண்ணன் விரும்பும் மார்கழி மாதமே குளிர் மிகுந்த மார்கழி நோன்புக்கு ஏற்றதென்பதையும் உணர்த்தி விட்டார்.

நீராட எழு என்றும், உறங்கும் ஜீவாத்மாக்களைத் தட்டி எழுப்பியதாய்க் கருணையை வெளிப்படுத்தினார்.

எல்லாரையும் புருஷகாரம் செய்து பகவானிடம் சேர்ப்பிக்கும் தன்னைப் போலவே, நித்யசூரியான, பகவானை விட்டுப் பிரியாத ஆதிசேடனைத் தாயாக்கி என் மாலையைச் சேர்க்க என்று வேண்டியது பூமித்தாயின் கருணை போன்றதே என்றாகிப் புதுப்பாவை ஆனதே.

பொருள்:

தேடக் கிடைக்காத தெள்ளிய அமுதே! தேன்போல இன்சுவை உடையானே, ஆதிசேடன் என்னும் பாம்பின் மீது பள்ளி கொண்டு இருப்பவனே! என் மாலையை நீ சேர்த்துக் கொள்வாயா? அதற்காய் இப்பாவை நோன்பில் உன்னைப் பாடி அழைத்தேன். எங்களுடன் கூடிக் குளிர்ந்து மகிழ வாராய்.



## பாவைமொழி - 2

**கொவ்வை இதழழகா; கூர்நல் விழியழகா**
**செவ்வை மொழியழகா செங்கம லப்பாதா**
**கண்ணாவுன் தன்மேலே காமத்தை மாற்றிவிடப்**
**பண்ணுமெம் நோன்பில் வதி.**

சந்தக்கவியார் உரை :

அவனிடம் ஆர்வம் ஏற்படுத்தியதை மேலும் தூண்டுகிறார். அவனின் உடலும் அழகு. அவனின் மொழியும் அழகு. செவ்வையான கீதையை மொழிந்தவனன்றோ.

வேதமொழியன்றோ கீதை. எல்லாரும் என்னையே அடைக. அத்தகையவரையே நான் விரும்புகிறேன் என்றானே கீதையில். மேலும் தாமரை போன்ற அவன் திருவடியில் பற்று வைக்கும்படி ஆழ்வாரைப் போலப் பாதத்தை நினைக்கக் கூறி, சரணாகதியை உணர்த்தியதும் மாலாவின் அறிவே.

அவனை அடையத் தடையான பகைகளை மடைமாற்றம் செய்க எனக் கண்ணனை வேண்டுகிறார். ஆண்டாள் சிற்றின்பந்தரும் பொருள்களை அனுபவிக்க மாட்டோம் இந்நோன்பில் என்றதைப் போல, பேரின்பத்தைத் தரும் கண்ணனிடத்திலேயே தங்கள் காமம் நிலைக்க வேண்டும். அதற்கும் அவனே துணையாதலால் அவனிடமே பெரும் பக்தி ஏற்படச் செய்க என வேண்டியது வைணவ சித்தாந்தமன்றோ.

அதுவும் இடைவிடாமல் தைலதாரையாக இருந்தால்தான் அவனையடைய முடியும். ஆதலின் நீ எம்கூட இருந்தால் சிறுகணமும் மறக்க முடியாதே என்று சாதுர்யமாக வேண்டியது மாலாவின் சாதுர்யமே.

பொருள்:

நன்கு சிவந்த கொவ்வைப் பழத்தையொத்த இதழ் கொண்ட அழகனே! கூர்ந்த நல்விழியழகனே! செம்மையான மொழிகளைக் கூறுபவனே! சிவந்த தாமரையையொத்த பாதம் உடையவனே! கண்ணனே! மற்றவற்றின் மேல் நாங்கள் கொண்ட ஆசையை மாற்றி உன்மேல் கொண்டிடச் செய்யும் இந்தப் பாவை நோன்பில் வதிவாயாக.



## பாவைமொழி - 3

வலப்பாதம் வானுயர்த்தும் வாமனனே போற்றி!
குலமுயரக் கும்பிடுவோம் கோவிந்தா போற்றி!
நலம்பயக்க நாமவனை நாடிடுவோம் நாளும்
பலமே பரமன் துணை

சந்தக்கவியார் உரை :

வேதம் முதலியன கூறும் வாமன திரிவிக்கிரம அவதாரத்தைக் கூறி, எல்லா நலன்களும் பெற்றுப் பகையொழிந்து வாழ வழிகூறுகிறார்.

வாமனாவதாரம் தேவருலகில் நிகழ்ந்தது. இந்திரனுக்காக மஹாபலியைப் பாதாளத்துக்கு அனுப்பியது. ஓங்கி உலகளந்தானைப் பாடினால் தீங்கின்றி வாழலாம் என்பதை அவன் நாமங்களே காட்டும். கோவிந்த நாமம் எல்லாம் தருவதுடன் கூறியவரோடு குலமும் உயர்த்தும் என்று கூறுகிறார்.

தேவர்களுக்காகப் பாற்கடலுக்கு இறங்கி வந்த பரமன் அவர்களுக்குக் காண்டலுக்கு எளிமையானதைப் போல

மானிடர் உய்வுக்கு நாமமே போதும் என்று தெளிவாக்கினார்.

குலம் முதலிய நல்லன எல்லாம் தரும் நாராயண நாம மகிமையைப் பாடிய ஆழ்வார்போலக் கோவிந்த நாமம் தரும் என்றார்.

எனவே பரமனே நாளும் துணை. அதுவே பலமான துணை.ஆதலின் பரமான கண்ணனைப் பற்ற மோக்ஷ "பலமும்" கிட்டும். நோன்புக்கெழுக! என்று முழங்கினார்.



பொருள்:

தன் வலப்பாதத்தை வைத்து அளந்து வானுயர நின்ற வாமனனே! போற்றி. நம் குலம் உயரக் கும்பிடுவோம் .கோவிந்தனே போற்றி! எந்நாளும் நலம்பெற நாம் அவனை நாடிடுவோம். கடவுளின் துணையே நமக்குப் பெரும்பலம்.



## பாவைமொழி - 4

**கார்மேகக் கண்ணா! கருணையுடன் நோக்கிங்கே!**
**கார்மேகம் கைகோக்கக் காற்று மிசைவுறப்**
**பார்குளிரப் பூமழைபோல் பாங்காகப் பெய்துவிடு!**
**சேர்வோமே உன்தன் பதம்.**

சந்தக்கவியார் உரை :

இங்கு தாம் உய்வு பெறுவதோடு, உலக அனைத்துயிர்களும் உய்வு பெறவும், நீரின்றியமையாதுலகு என்ற படியும்,

நோன்புக்கு மூலமான உடல் தூய்மைக்கு வேண்டிய நீர் நிறையவும் அக்கண்ணனையே வேண்டுகிறார்.

ஆழிமழைக் கண்ணா என ஆண்டாள் பாடியதைப் போல, கார்மேகக் கண்ணா, மழை பொழிவதற்கேற்ற கறுத்த மேகம் போன்ற கண்களை யுடையவனே! அன்பரெனில் கண்களில் நீர் ததும்பக் கடாக்ஷிக்கும் கண்ணனே! .நோன்பு சிறக்க நீர்வளம் பெருக்குவாயாக.

எங்கும் மரஞ்செடி கொடிகள் தழைக்க உதவுக. இடையர் செல்வமான மாடு முதலியன செழித்தால்தான் கண்ணனை வெண்ணெய் முதலியவற்றால் ப்ரீதி செய்ய முடியும். இதற்கும் அவனருள் இருந்தால்தான் அவன் கட்டுப்பாட்டுக்குள்ளிருக்கும் மழைக் கடவுள் வருணன் போன்றவர் துணையிருப்பர்.

அவனருளாலே அவன் தாள் வணங்கி என்றபடி நம் முயற்சி எத்தனையிருப்பினும் அவன் இரங்கினாலேயே மோக்ஷம் என்ற வைணவ சித்தாந்தப்படி, அவனையே உதவ அழைப்பது பொருத்தமானதாகும். அவனே அளித்தாலல்லது, "நாறு இணர்த்துழாயோன் நல்கின்" அல்லது "ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்" என்ற பரிபாடல் கூறுவதும் உண்மை.

பொருள்:

கார்மேகம் போன்ற கருமை நிறமுடைய கண்ணனே! கருணையுடன் இங்கு நோக்குவாய்! நாங்கள் உந்தன் பாதம் சரணடைவதற்காகக் கார்மேகங்கள் கைகோத்துக் குளிர் காற்றுடன் சேர்ந்து உலகம் குளிர்வதற்காகப் பெய்யும் மழை போல உன் கருணை மழையைப் பாங்காகப் பெய்துவிடு.



# பாவைமொழி - 5

ஆழிசூழல் அரியவெண் சங்குடன்
வாழியெம் பெம்மானே! வையகம் ஓங்கட்டும்!
நாழிகை நேரம் நயவுருக் காட்டிவிடு
வாழ்வோமே நின்பதம டைந்து

சந்தக்கவியார் உரை :

உன் மூல தரிசனமே பாவங்களகன்று மோக்ஷ சித்திக்குத் துணையாகும். நீ இடையர் குலத்துதித்துச் சாதாரண மனிதர் போலக் காணப்படிம் அனைவரும் அறிய மாட்டார்கள். கம்சனாதி பலரும் உன்னை அறியவில்லையே. உன்னை நாங்கள் அறிவோம்.

ஆதிப் பரம்பொருளான ஸ்ரீமந் நாராயணனே நீ.

நித்யசூரிகளான சுதர்சனச் சக்கரமும், பாஞ்ஜசன்யமெனும் சங்கும் உன்னை எம் மனக்கண்ணில் காட்டித்தந்து விடும்.

“கை கழலா நேமி” என ஆழ்வாரால் பாடப்பட்ட இவை அவதார காலங்களில் மறைந்தேயிருக்கும்.

சிசுபால வதம், போர்க்களத்தில் சூரியனை மறைத்த செயல்களால் சங்கு சக்கரப் பரமன் நாராயணக் கண்ணனே என்பது தெளிவு.

உன் தரிசனம் தேவர்க்கும் முனிவர்க்கும் கிட்டாதே. அன்புடைய அடியார்க்குச் சௌலப்யனாவாயே. அனுமன் முதலியோருக்குக் காட்டியவன்தானே. அதனால் ஒரு நாழிகை நேரமாவது உன்னைக் கண்டால் எத்தனை ஜன்ம பாவங்களும் நசியுமே. “இருவினையுமில ஏத்துமவை” எனப் பரிபாடலும் கூறியதே. பரமபதமே தந்துவிடுமே.

இங்குன்னைக் காணப் பலப்பல தடைகளுண்டே. எனவே பரமபதமடைந்து தரிசித்துக் கொண்டே பேரானந்தம் பெறுவோமே. கருணை காட்டு என்கிறார்.

பொருள்:

சுழலும் சக்கரத்துடனும், அரிதான வெண்சங்குடனும் வாழ்க எம் பெருமானே! உலகம் செழிக்கட்டும். நாழிகை நேரமாவது நீ உன் அழகான திருவுருவத்தை எங்களுக்குக் காட்டி விடுவாய் என்றால் நாங்கள் உன் பரம்பதம் அடைந்து வாழ்வோம்.



## பாவைமொழி - 6

புள்ளினங்கள் ஆர்ப்பரிக்கப் பூக்குமிந்தக் காலையிலே
துள்ளி எழுந்துவா தூக்கத்தை விட்டுவிட்டு
மெல்லினான் சங்கொலியுன் மேனி வருடிவிட
வல்லோனே வாவிளை யாடு

சந்தக்கவியார் உரை :

இப்பாடலில் அக்கோதையிலிருந்து இக்கோதை மாறுபடுகிறார். அக்கோதை புதிய தோழிகளை எழுப்புகிறார்.

இம்மாலா கண்ணனையே எழுப்புகிறார். விரைவில் கண்ணனைக் காண வேண்டும் என்ற வேட்கையால் இங்குத் தன்னிலை மறந்து கண்ணனையே "எழு. வா. என்னுடன் விளையாடு" என்கின்றார். அங்கு முனிவர்கள் யோகியர் போன்றோர் விடியற்காலை எழும்போது "ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி" என்று கூறிய ஒலி கேட்டும் எழாதவளாயிருக்கிறாயே என்பதை மாற்றிப் பாடுகிறார் மாலா.

நெடுந்தொலைவிலுள்ள பாற்கடலைத் தேவர் முதலியோரும் அடைவது எளிதன்று. அங்குள்ள க்ஷீராப்திநாதனுக்கு இம்முனிவர்கள் கூறுவது எட்டுமோ என்ற மானிடப்பெண்ணின் குணமான ஐயமேற்பட்டு, இங்கு பக்கத்திலேயே கண்ணனாகிய ஹரி இருக்கும்போது கூப்பிட்டு இவனை எழுப்புவது எளிதுதானே என்றெண்ணுகிறாள்.

தம் கைச்சங்கொலியை உரக்க ஒலிக்காது மெல்லியதாய் ஒலிக்கிறாள். மற்றவர் எழாமல் இவன் எழுந்து வருவதையே விரும்புவதால்.இவ்வினிய ஒலி என் இனிய பக்தியினால் எழுந்தது.ஆகையால் இது அவன் காதெனும் பொறியில் கேட்பது மட்டுமின்றி அவன் மேனியின் நாடி நரம்புகளிளெல்லாம் அவன் பத்தினிமார்கள் பாற்கடலில் வருடி விடுவது போல வருடுமே. அதன் பின் இந்த ஸ்பரிசத்தால் தூங்க முடியுமா?. போதும் உன் அறிதுயில். எல்லாம் அறிய வல்லோனே ! எழுந்து வந்து என்னோடு விளையாடு என்பது புதிய பாவையாகும்.

பொருள்:

பறவையினங்களின் ஆரவார ஒலியுடன் கூடிய அதிகாலை நேரத்தில் துள்ளி உன் தூக்கத்தை விட்டு எழுந்து வா. உன் தூக்கத்தை எழுப்புவதற்காக, என் கண்ணனே! மெலிதாய்ச் சங்கொலி எழுப்பினேன். அது உன் மேனியை வருடி விட்டு எழுப்ப, வல்லவனே வா! வந்து என்னுடன் விளையாடு.





## பாவைமொழி - 7

**மத்தொலி நாதமும் மாதரணி ஓசையும்**
**கத்தும் பறவைகள் கானமும் கேட்டாயோ**
**பெண்ணே! எழுந்திராய்! பேயுறக்கம் தள்ளிவிட்டுக்**
**கண்ணனைக் காணக் கிளம்பு**

சந்தக்கவியார் உரை :

இதுவரை பொதுவாக அனைத்து ஆத்மாக்களைக் கூப்பிட்டு உய்வு பெற நோன்பிற்கெழுப்பியது விடுத்து, தாமஸ குணமுடைய, பேய்க் குணமுடையாரேயும் கடைத்தேற்ற, பேயுறக்கம் விட்டெழு என்கிறார்.

இந்நிலையோர் மிகவும் தாழ்ந்த பொருள்களில் பற்று வைத்துச் சிற்றின்பப் பிரியர்களானவர்கள். அதிக உணவுண்பவர்களே தூக்க நிலையிலிருப்பர். "அன்கான்ஸ்ஷியஸ்" என்ற மயக்க நிலையில் இருப்பர். மிகுந்த "கான்ஸ்ஷியஸ்" என்ற நிலையே (விழிப்பு நிலையே) இறைமைக்கு இட்டுச் செல்லும்.

எத்தனை பேரொலியும் இவர்களை எழுப்பாது. மத்தொலியும் அதன் அசைவில் அணிந்த பல்வகை அணிகளின் ஓசையும் எழுப்பி விடாத பேயடித்துப் போட்டாற் போல உறங்கி வாழ்வை வீணடிக்கிறீர்களே. "வலியன் என்ற ஆனைச் சாத்தனாகிய கரிக்குருவிகள் இரைதேடக் கிளம்பும் முன் ஒன்று கூடி ஒலிக்கும் ஒலியும்" என்ற கோதையாரை உட்கொண்டே, கத்தும் பறவைகளின் பாடல் ஒலியும் மத்தொலி, அணியொலிகளும் எழுப்பவில்லை. சிறு சப்தமே எழுப்ப வல்லதாயிருக்க, பாடல் ஒலிகள் எங்ஙனம் உறக்கத்தைக் கலைக்காமலிருக்க முடியும்.

அப்படியும் உறங்குபவர்களே மிகுந்த தாமஸிகள். அவர்கள் மீதும் இரக்கப்பட்டுக் கடைத்தேற்ற எழுப்புகின்ற கருணையைப் பாடுகிறார். தாமஸ குணத்தைப் போக்க, சத்துவ குணத்தானான கண்ணனைக் காணக் கிளம்பு என்கிறார்.

பொருள்:

ஆய்ச்சியரின் மத்து ஒலிக்கும் ஓசையும், அவர்கள் மத்தால் கடையும் போது அவர்களின் கைவளையல் முதலிய அணிகலன்கள் அசையும் ஓசையும், சுற்றிப் பறவைகளின் சத்தம் பாடல்போல் ஒலிப்பதையும் கேட்டாயோ என் தோழி! ஆழ்ந்த உறக்கம் விட்டு எழுந்து கண்ணனைக் காணக் கிளம்புவாய்!



## பாவைமொழி - 8

**கேசியைவ தம்புரிந்த கேசவனை மாதவனைப்
பேசிப் புகழ்ந்து பெரும்பாடல் பாடிடுவோம்
நாசிப்பூ ஆடிட நல்லுறக்கம் ஏன்பெண்ணே
நேசம் நெருங்க எழு**

சந்தக்கவியார் உரை :

இக்கண்ணனே பரம்பொருளான நாராயணன். நாராயணனின் அவதாரமான கண்ணனே கேசி என்ற குதிரை வடிவிலிருந்த அரக்கனைக் கொன்று கேசவனானான். இத்தகு மாதவனின் பெருமைகளைப் பாடக் கேட்டும் எழாமல் உறக்கம் ஏனோ.

கேசவன் என்றே கூறிய ஸ்ரீஆண்டாளுக்கு விளக்கம் அளிப்பதைப் போல கேசியை வதம் புரிந்ததைக் கூறுகிறார்.

சங்கப்பாடலிலும்,
"மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரைவாய்ப் பகுத்திட்டுப்
புடைத்த ஞான்று இன்னல் கொல்மாயோன் என்று உட்கிற்று
என் நெஞ்சு" என்று முல்லைக்கலி மூன்றாம் பாடலிலும்,

"கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல் எரிசினம் கொன்றோய்" என்று மூன்றாம் பரிபாடலிலும் கேசவன் என்ற பெயருடன் அவதரித்த கண்ணன் கேசியைக் கொன்ற வரலாறு கூறப்படுவதும் காணலாம்.

பேருறக்கத்தை, மூச்சுக் காற்றாலாடும் மூக்குத்தி அசைந்து குறுகுறுப்பேற்படுத்தியும் எழாத தன்மையைக் குறிப்பதழகு.

கண்ணனே பரமன். அவனை அடைவதே பிறவாப் பேரின்பம்.அதை விட்டுவிட்டுச் சிற்றின்பத் தூக்கமெதற்கு, எழுங்கள் என்கிறாள் இப்பாவை.



பொருள்:

கேசி என்னும் அரக்கனை வதம் புரிந்த கேசவனை, மாதவனை அவன் பெருமைகளைப் புகழ்ந்து பாடல் பாடிடுவோம். நாசியில் அணியக்கூடிய மூக்குத்தி மூச்சு விடுதலால் ஆடும் அளவு நல்லதோர் உறக்கம் ஏன் பெண்ணே? அவனுடைய நேசம் நம்மை நெருங்க எழுந்திரு.



## பாவைமொழி - 9

**உள்ளமே மாடமாய் உன்நினைவே நெய்யுருவாய்க்**
**கொள்வேனே! நான்விளக்கோ? கோவிந்தா மூவரைப்போல்**
**கொள்வாய் என்பக்தி கோபாலா வந்தமர்வாய்!**
**துள்ளா ஒளியாய்த் துலங்கு**

சந்தக்கவியார் உரை :

விளக்கேற்றுவது புண்ணியச் செயலாகும். இதைவிட ஞானச்சுடர் விளக்கே பரமனுக்குகந்தது. உலக இருட்டில் இருப்பவர்களைக் காட்டிக் கொடுப்பது.

முதல் ஆழ்வார் மூவரும் அன்பே தகளியாய், ஆர்வமே நெய்யாக்கிப் பாடி இறைவனை அருகு வரவழைத்து, நெருக்கி உடல் தழுவியதைப் போன்ற ஆனந்தத்தையும் அனுபவித்தவர்கள்.

இதைப் போலக் கண்ணனை அனுபவிக்க எளிய வழி உள்ளக் கோயிலில் உறையும் அவனுக்கு (ஒவ்வொரு ஜீவாத்மாக்கள் உள்ளே பரமாத்மாவாக உறைகின்றேன் என்ற கண்ணனின் கீதைப்படி,) நினைவாகிய நெய் விளக்கேற்றுக. அதனால் நீயே விளக்கம் பெற்று விடுவாய்.

இதுவே மற்ற ஆத்மாக்களுக்கும் கரைசேர விளக்குமாகும்.

கண்ணன் உன்னையறிந்து உன் உள்கோயிலில் ஒளியோடு மகிழ்வன். நாம் எப்படி அவனையடையத் துடிக்கிறோமோ அதைப் போலவே அவனும் ஒவ்வொரு ஜீவாத்மாவையும் அடைய ஆசைப்படுபவன் என்ற வேதசாத்திரக் கருத்தை நிறுவுகிறார். அவனே நாராயணப் பரஞ்ஜோதி என்று கூறிய நாராயணோபனிஷத் கூற்றின்படி உளத்தில் ஒளியாய்த் துள்ளுவான் என்றதும் சிறப்பே.

பொருள்:

உள்ளம் கோவிலென்றால், அதில் உன் நினைவே நெய் எனக் கொண்டேன்.. அப்படியாயின் நான் விளக்கன்றோ? முதல் மூன்று ஆழ்வார்களான பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் போன்று என் பக்தியையும் ஏற்றுக் கொள்வாய். கோபாலா! என்னுள் வந்தமர்ந்து துள்ளாத ஒளியாய் நிறைந்து ஒளி வீசுவாயாக!



## பாவைமொழி - 10

**திருமுடி மேலே திருத்துழாய் கொண்டு**
**கருநிற வண்ணனாம் கார்மேகக் கண்ணன்**
**வரும்பொழு தாகிற்றே வந்துவிடு நங்காய்!**
**அருளாளன் ஆழியான் காண்**

சந்தக்கவியார் உரை :

கண்ணன், "உங்களால் இயன்றபடி பக்தி செலுத்தினால் போதும். இலை தூவி அர்ச்சனையே போதும்" என்றான் கீதையில்,

இலைகளில் மிக விருப்பமான துளசி மணத்தை விரும்பி அணிபவன் என்பதனால் துளசியின் பெருமைகூறி இம்மணத்தோடு கண்ணன் வரப் போகிறானே. இன்னும் உறக்கமா? துளசி மணம் உங்களை எழுப்பி விடுமே. மற்ற மலர்களைவிடத் துளசியே உயர்ந்தது என்று காட்ட அதனைத் தலையிலேயே சூட்டி உலகிற்கு உணர்த்தி விட்டானே. கழுத்தில், மார்பில் தாங்குவதைவிடத் தலையால் தாங்குவதே சுமக்கும் பொருளின் ஏற்றத்தைக் கூறும்.. இக்கண்ணனே பரமன். இவன் தலையைத் தாங்கும் பெருமையுடைய திருத்துழாயைவிடச் சிறந்தது வேறுளதோ.

சங்கப் புலவரும், "நாறு இணர்த் துழாயோன்" என்று மணமிக்க துழாயணிந்தவன் என்றார். "துளபம் சூடிய அறிதுயிலோனும்" என்றும், "நறுந்தாரப் புரிமலர்த் துழாஅய் மேவல் மார்பினோய்" என்று பரிபாடலிலும் மாலையாக அணிந்ததே கூறினர்.இரு கோதைகளும் திருத்துழாயை முடியிலேற்றிச் சங்கப் புலவரிலும் உயர்ந்தனர்.

கண்ணனே ஆதிமூலனான நாராயணன் என்பதைத் தெளிவாகக்கூறி, அவனே பரமபதம் விட்டு இறங்கிவந்து திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவன். தேவர்களும் தன்னைப் பரமபதத்தில் காணலாகாது என்பதால் இறங்கிவந்து விஷ்ணு அவதாரமெடுத்துப் பாற்கடலில் பள்ளி கொண்டவன்.

இப்படிப்பட்டவன் தேவர்களைவிட நம்மை ரக்ஷிப்பதற்காக மனிதப் பிறப்பெடுத்து நம்மிடையே நாம் எளிதிற் காண அவதரித்தவன். அவனேஆழியான் என்றுகூறிப் பாற்கடலான், சக்கரந் தரித்தவன் என்று பரம்பொருளைத் தெளிவாகக் கூறியது நயமே "காண எழுவாய்.பறை தருவான்" எனக் குறிப்பால் உணர்த்தினார்.

பொருள்:

திருமுடி மேல் துளசி அணிந்து கருநிறமான கார்மேகத்தையொத்த கண்ணன் வருகின்ற நேரம் இது, வந்துவிடு என் தோழி! .பாற்கடல் நாயகனாம் அருளாளனைத் தரிசிப்போம்



## பாவைமொழி - 11

காலடி கண்டதும் காதல் பெருகிட
மாலடி பற்றியே மங்கையர் கூடுவர்
ஆடும் மயிலினமாய் ஆடி அவனுடன்
கூடிக் குளிர்வோம் குழு

சந்தக்கவியார் உரை :

கண்ணன் வருகையைக் காலடிச் சத்தம் மூலம் அறிந்தனர். மகளிர் என்றதால் அவனோடு கூடும் சேர்க்கையைவிடத் திருவடிச் சேர்க்கையே விரும்பினர். யோகியர் முதலியோரும் திருவடி பெறுதலையே பேரின்பமாக எண்ணுவர். நம்மாழ்வார் முதலியோரும் நாயகி பாவத்திலிருந்து அவனுடன் கூடும் சேர்க்கையின் மேம்பட்ட பேரின்பம் தருவதாகத் "துயரறு சுடரடி தொழுதெழு என் மனமே" என்கின்றனர். முழுச் சரணாகதியுமிதுவே.

இதையுணர்ந்த மாலா, காலடியை முதலிற் கூறியதும் சிறப்பே. மங்கையர் அனைவரும் இவ்வடிப் பேற்றையே அடையக் கூடுவர் என்றதே உயர் ஞானியர் மனோபாவமாகும்.

இத்திருவடிச் சேர்க்கை கிடைத்தபின் எல்லையற்ற குதூகலத்தால் ஆடும் மயிலினமாய் ஆடுவோம்..

எனவே இதனை என்றும் அனுபவிக்கப் பரமபதத்தில் முக்தாத்மாவாகி இன்பமுற இந்நோன்பின்வழி முயல எழுவாயாக. உறக்கமேன் என்றதும் சிறப்பே.

பொருள்:

கண்ணனின் காலடிச் சத்தம் கேட்டதுமே காதல் பெருகி அவன் அடிதனைப் பற்றுவதற்காக மங்கையர் கூடுவரே. ஆடும் மயில் போல அவனுடன் ஆடிக் கூடி மகிழ்வோம். அதற்காய், பெண்ணே! நீயும் எழுவாய்!



## பாவைமொழி - 12

கன்றின் நினைவினிலே கால்வழியும் பால்போல
நின்று சொரிந்திடுவாய் நின்னருளே நாரணனே
வாசல் அடைய வழிகாட்டேன் என்றேயிவ்
வாசலில் வைத்தேனே பற்று

சந்தக்கவியார் உரை :

இங்கு கோதைக்கு மாற்றாகச் சில மாற்றிக் கூறுவார்.

எருமை மாடுகளுக்குப் பதில் பசுமாடென்கிறார். வெண்ணெய்க் கண்ணனுக்குத் தாங்களும் தரவேண்டும் என்ற நினைப்பாலேயே பசுக் கூட்டங்கள் (முன்செய் நல்வினையால் உயர்வடைந்த)மிகுதியான பாலைக் கொள்கின்றன. தம்மை மேய்க்கும் கண்ணனாலேயே இவ்வூரில் மழை வளம் மிகுதி. புல் மிகுதி. வயிறு முட்ட மேய்வதால் கண்ணனுக்குப் பால் வெண்ணெய் தயிர் நிறையத்தர, தம் மடியில் மிகுந்த பாலைச் சேர்த்து வைக்கின்றன. கன்றுகளுக்குப் போகவும்

பால் நிறையச் சுரப்பதால் பால் கட்டி வலியால் துன்புறுவதைப் போக்கிக் கொள்ள மீண்டும் கன்றுகளை நினைக்க, பால் தானே அபரிமிதமாகச் சொரிந்து கால்வழிப் பரவி வீட்டையே சேறாக்கும். இப்படி அஃறிணைகளும் க்ருஷ்ண பக்தி நிரம்பக் கொண்டிருக்குமூரே ஆய்ப்பாடி. இப்படியான ஊரின் இல்லில் உள்ளவர்களும் க்ருஷ்ண பக்தியில் சிறந்திருப்பரே. இதனை அறியாதவனா கண்ணன்.

ஏ கண்ணா! நீ பசுக்களுக்குத் தலைவனாவாயே. பசுக் குணமுடைய இவ்வாய்ச்சிக் கன்றுகளுக்கு நீயும் அவைபோல ,உன் கருணைப் பாலை அபரிமிதமாக அளிப்பாயன்றோ. கோபாலநாராயணனன்றோ நீ.

நாங்கள் உன் கருணையால் பரமபத வாசலையடைய இன்று இங்குவுன் அரண்மனை வாசலையடைந்து இதனிடம் பரமபத வாயிலின் மேல் கொண்ட பற்றல்லவா வைத்துள்ளோம்.

விரஜை நதி தாண்டிப் பரமபத வாசலுக்கு வழிகாட்டும் கருணையன்றோ உன் தாய்ப்பாசம். வழிகாட்டு!. வேதமே உன்னைத் தாய் என்றே போற்றுகிறதே! என்ற புதுப்பாவை கூறியதும் உயர்வே.

பொருள்:

தன் கன்றின் நினைவு வந்ததுமே பசு தன்னை அறியாது பாலினைக் கால்வழிப் பரப்பும் .அதுபோல் எங்களை நினைத்ததுமே உன் அருளைப் பொழிவாய்! நாராயணனே! உன்னருளைப் பெற "பரமபத வாசல் அடைய வழிகாட்டேன்" என வேண்டி இவ்வரண்மனை வாசலில் பற்று வைத்தேனே.



## பாவைமொழி - 13

நாரை பிளந்தாய்; நரஹரியாய்க் கிள்ளிவிட்டாய்;
பேரையுரைத் தாலே பெரும்பலனைத் தந்துநின்றாய்
வெள்ளமெனச் சீறும்ந்த வேங்கடவன் அன்பினிலே
குள்ளக் குளிரக் குளி

சந்தக்கவியார் உரை :

இப்பாடலில் கோதை கூறியனவற்றைச் சிறிது மாற்றுகிறார். புள்ளின் வாயைக் கீண்டவன் என்பதில், புள் கொக்கென்பர். சிலர் விசித்திரமான பறவையுருக் கொண்டு வந்த பகாசுரன் என்பர். கூட இருக்கும் ஆயர் சிறுவர்கள் இவ்விசித்ரமான பறவையைப் பார்த்துச் சூழ்ந்திருந்தனர்.

இதனை நாரை என மாற்றினார் மாலைக் கோதை. இதைப் போல இராவணனைக் கிள்ளிக் களைந்தானை என்பதையும் மாற்றி, இரண்யகசிபைத் தம் நகத்தாலேயே கிள்ளியழித்த செயலாக மாற்றிக் கூறினார்.

இராவணன் மேல் பலவித அஸ்திரங்கள் விட்டே நிறைவில் வென்ற செயலைவிட இரண்யகசிபு வதம் வெறும் கைந்நகத்தால் நிகழ்ந்தது என்று பரம்பொருளின் வலிமையைக் கூறியது சிறப்பானதே.

நாரையையும் கண்ணன் கைகளையே ஆயுதமாகக் கொண்டு அழித்தான் என்பதால் பரமே கண்ணன் என்பதை உறுதியாக உணருங்கள் என மற்றவர்க்குத் தெளிவாகக் காட்டியது சிறந்ததாயிற்று. இவனையே ஹரி ஹரி என வேதம் முழங்குகிறது என்று ஆயர் சிறுமிகள் அடைக்கலம் புக வேண்டிய பொருள் ஹரியாகிய கண்ணனே என உணரவைத்தார்.

கண்ணன் பேரைச் சொன்னாலேயே பெரும்பலன் தரும் சௌலப்யன். தவசிகளைப் போலக் கடுந்தவமியற்றிப் பலன்பெற வேண்டா.இவனே வேங்கடவன். இவனிடமே பக்தி செலுத்தி நோன்பிருக்க, இதுவே நன்னீர்மைத்தாகி, நீராடித் திளைப்பது போன்றது . தண்ணீர் உடல் தூய்மையே தரும். இவன் மேல் மனத்தால் கொள்ளும் பக்தியே மிகத் தூய்மையைத் தருவது. எனவே அன்பு நீரில் குளித்தெழு என்று புதிய பாவை நோன்பை அமைத்தார்.

பொருள்:

நாரை பிளந்தாய்: நரசிம்மமாய் நகத்தால் இரண்யனைக் கிள்ளி எறிந்தாய். உன் பெயர் சொன்னாலே பெரும்பலனைத் தந்து நின்றாய். வெள்ளமாய்ச் சீறிவரும் வேங்கடவன் அன்பினிலே நன்றாகத் திளைத்து, தோய்ந்து அனுபவிப்போம். வாருங்கள்.



## பாவைமொழி - 14

செங்கழு நீரெழச் சேராதே ஆம்பலினம்
பொங்கும் புதுநாளாம் பூத்த புவனத்தில்
சங்குசக்ர தாரியவள் சாதனைகள் பேசிடுவோம்
இங்குறக்கம் கொள்ளா(து) எழு

சந்தக்கவியார் உரை :

இங்கு கோதை நாச்சியாரை ஒட்டியே சில கூறுகிறார். பொழுது நன்கு விடிந்தும் தூக்கம் என்ற தமோ குணம் எப்படிக் கண்ணனை நன்கு உணர்ந்த பக்தர்களையும் சோம்பலுடன் படுக்க வைக்கிறது என்று கூறுகிறார்.

எல்லாரையும் தான் முதலில் விழித்து எழுப்புகிறேன் என்ற பக்தை இவள். இவளுக்கு இவள் இல்லத்துச் சான்று காட்டியே எழுப்புகின்றனர். சூரியனால் மலர்வதும், கூம்புவதுமாகிய மலர்கள் உன் இல்லத்திலேயே மலர்ந்து கூம்பின. பொழுது விடிவதற்கு வேறு சான்று தேவையா என்றனர்.

சங்கு சக்ரதாரியான கண்ணனைப் பாடும் உன் திருவாயால் பாட எழுந்திராய். பரம்பொருள் நாராயணனே கண்ணன் என்பதற்கு இதைவிடச் சான்று தேவையா. கண்ணனிடம் வெளிப்படையாக இவை காணப்படாவிடினும் தேவையின் போது தோன்றுவன அல்லவா. அவதாரத்திற்கு ஏற்றபடி அவை உள்ளன.எல்லா அவதாரங்களிலும் அவனை விட்டுப் பிரியாதவையே சங்கு சக்ரமான திவ்யாஸ்திரங்கள் என்றே வேதம் கூறும்.

இப்படியான பரம்பொருள் கண்ணன் மற்ற க்ஷேத்திரங்களில் எழுந்து அருளாமல், நம் மீது கொண்ட கருணையால் இங்கேயே நிலைத்த வாசம் கொண்டுள்ளானே. அவனை அடைய இங்கே பல தடைகள் உள்ளனவே. இருந்தும் அவ்வப்பொழுது நம்முடன் சேர்ந்து மகிழ்ந்து விளையாடும் பேறு பெற்றுள்ளோமே.

எப்பொழுதும் தடையின்றிக் கூடியிருக்கக் கூடிய பரமபதம் சேர்க்க வைக்கும் இந்நோன்பைச் செய்ய வேண்டாவா. எழுந்திரு. "நேமியும் வளையும் ஏந்திய கையால்" என்று சங்கத்தமிழ் பரிபாடல் கூறுமே.பாடஎழு என்றார்.

பொருள்:

செங்கழுநீர் என்ற கொடி எழுகின்றது. அதே சமயம் இரவில் மலரும் ஆம்பலினம் கூம்பிப் போகிறது. அத்தகைய புது நாளில் விழித்த உலகினில் சங்கு சக்ரம் தரித்த திருமாலவனின் பெருமைகளைப் பேசிடுவோம். இங்கே உறக்கம் கொள்ளாது எழு.



## பாவைமொழி - 15

வல்லமை பொங்கி வலம்வரும் தோழியே
இல்லாத பொய்யுறக்கம் இங்கெதற்கு இந்நாளில்
நில்லாமல் சேர்ந்து நிமலனருள் பாடிடவே
செல்லமே சீக்கிரமே வா.

சந்தக்கவியார் உரை :

இங்கும் கண்ண பக்தைகளின் பொய் உறக்கம் கலைய எழுப்புகிறார்கள். விடியற்கால உறக்கமே சுகமான அனுபவம். இக்காலத்துக் குழந்தைகளும் படுக்கையை விட்டு எழுந்திருக்க மனமின்றி, எழுப்பும் தாய்மார்களிடம், பலவித காரணங்கள் கூறி உறக்கசுகத்தை அனுபவிப்பர் என்கிறார்.

"அம்மா ப்ளீஸ்மா! இன்னும் ஒரு அஞ்சு நிமிஷம்மா.." என்று நீட்டித்தும் பின் மீண்டும் எழுப்பும்போது, "அண்ணன் எழுந்து விட்டானா? அக்கா எழுந்து விட்டாளா?" என்று அவர்களைக் கூறித் தாமதப்படுத்துவர். ஏனெனில் அவர்கள் தம்மைவிடப் பிடிவாதக்காரர்கள். காலைத் தூக்க சுகத்தை விட்டுக் கொடுக்காதவர்கள். "அவர்களை எழுப்பிவிட்டுப் பின் என்னிடம் வருக!"என்பன போன்ற சாக்குப்போக்குச் சொல்லும் வல்லமை யுடைய தோழி என்று அழைத்தது உலக இயல்புணர்ந்து கூறியதே.

மேலும் படுக்கையில் அரைத் தூக்கத்துடன் முந்தைய நாட்களில் கண்ணனுடன் கூடியிருந்த கணங்களையெல்லாம் அசை போட்டுக் கொண்டிருக்கும் போது தடையாக எழுப்புவதைத் தாங்க முடியாமல் பொய்யான சாக்குக் கூறி எழுவதைத் தள்ளிப் போடும் சாமர்த்தியமுள்ள வல்லமை உடைய தோழி என்பதும் அறிவர். (தற்காலம் பெரும்பாலான இளைஞோர் அசை போடுவன அறிவோம். தெய்வமே கூட இருக்கும்போது வாழ்கின்ற இளைஞோர்க்கு வேறு அசைகள் இருக்க முடியுமோ)

இத்தகையவரை எழுப்பும் உபாயம் "கண்ணனான நிமலன் புகழ் பாடப் போகிறோம்!. நீ வந்தால் வா!" என்று கூறி "நாங்கள் அவன் சமீபத்தை அனுபவிக்கப் போகிறோம். நீ படுத்தே இங்கிரு" என்றவுடன், நிச்சயம் எழுவாள். நம்மைவிடக் க்ருஷ்ண ப்ரேமை மிக்க தோழி என்று, நாம சங்கீர்த்தனப் பெருமை கூறிச் "செல்லமே! சீக்கிரம் வா!" என்று எழுப்புகின்றதைப் படம் பிடித்தார் நம் கோதா மாலா.

பொருள்:

நல்ல பல செயல்திறன் கொண்டு வலம் வரும் தோழியே! உறங்குகிறேன் என்று இல்லாத இந்தப் பொய்யுறக்கம் ஏனிங்கே? இங்கு வீணே நில்லாது நாம் அனைவரும் சேர்ந்து இறைவனின் புகழைப் பாடிடுவோம். செல்லப் பெண்ணே! சீக்கிரம் எழுந்து வா!



## பாவைமொழி - 16

ஆய ரரசன் அரண்மனை வாசலிலே
தூய பணிகொள்ளும் தூங்காத காப்போனே
ஆயச் சிறுமீர் அனைவரும் வந்துள்ளோம்
தூயனையெ முப்பு துயில்

சந்தக்கவியார் உரை :

உயர்ந்த பெரியோர்கள், அரசர் முதலியோரிடம் நம் காரியங்களைச் சாதித்துக் கொள்ள முதலில் அவர்களுக்குத் தொண்டு செய்பவர்களிடம்அன்பு கொண்டு சாதித்துக் கொள்வதைப் போன்ற வழிமுறைகளை அறிந்த ஆண்டாளைப் போலவே இவரும் கண்ணன் அரண்மனைக் காவலனைப் புகழ்கிறார். "அரசன் வாயிற்காப்போனே!" என்று கூறினாலும், இக்கண்ணன் மற்ற அரசர்களைப் போன்றவனல்லன். இவனே பரம்பொருள். இவனே சுத்த சத்வ குணமுடையோன், எம்மலக் குற்றமும் இல்லாத தூயவன். இத்தகையவனின் வாயிற்காப்போனும் தூயவன் தானே.பரமபத ஜய விஜயனைப் போன்ற சத்துவன்தானே. இக்காவல் பணியும் கிடைத்தற்கரிய தூய பணியன்றோ. எத்தனை முக்தாத்மாக்கள், தேவர்கள், நித்யசூரிகள் வந்து தரிசனம் பெற்றுச் செல்ல இவ்வாயில்தானே இடமளிக்கிறது. அவர்களின் தரிசனமும் பாகவத தரிசனமுமன்றோ. எனவே "தூயபணி செய்யும் வாயிற்காப்போனே!" என்கிறார்.

இப்பணி செய்யும் பாகவதோத்தமனான இவ்வாயிற் காவலனிடம் தூக்க தேவி குடியிருப்பாளா. தூங்காமல் இக்கைங்கர்யம் செய்யும் இக்காவலன் ஸ்ரீராமனுக்கு வனவாசத்தில் தூங்காமல் பணிசெய்த (ஏழிரண்டாண்டுகளே) இலக்குவனைப் போன்றவனன்றோ. எனவே இவனை விளித்துத் தூயவனைத் துயில் எழுப்பக் கேட்பது அவன் பகவானிடத்துப் பெற்ற உரிமையை அறிந்ததாலோ. நம்பிள்ளை வியாக்யானத்தைக் கேட்க மூலஸ்தானத்திலிருந்து வெளிவந்து எட்டிப் பார்த்த அரங்கனை விளக்குப் பிச்சன் என்ற காவலன், "ரங்கா உள்ளே போ!"என்று விரட்ட, ரங்கனும் கேட்டு அதன்படி உட்சென்றதை ஆசார்யர்கள் எழுதி வைத்துள்ளமை பொய்யோ.

அன்புடையவருக்குப் பகவானும் அடிமையானவனே இக்காவலனின் உரிமை யாருக்குக் கிடைக்கும்? ஸ்ரீஆண்டாள் தூயோமாய் வந்தோம் திருப்பள்ளி எழுச்சி பாட என்றதைவிட, எத்தனை தூயோமானாலும் மனிதர்க்கேயுரிய முக்குண வசப்படுதலால் மனத்தூய்மையும் குறைவுபடுமே. என்றும், பரமன் கண்ணனே என்றும் தூயவன் ஆதலால் தூயோனை எழுப்பென்றது உயர்வானதாகின்றதே. மேலும் கண்ணனின் உறக்கம்

பொருள்:

ஆயர் குலத்துக்கு அரசனான கண்ணனின் அரண்மனை வாசலில் தூய்மையான காவல் பணியை மேற்கொள்ளும் தூக்கம் இல்லாது என்றும் விழிப்புடன் செயலாற்றும் வாயிற்காப்போனே! ஆயர் குலச் சிறுமிகள் அனைவரும் வந்துள்ளோம். சத்வ குணமுடைய தூய்மையான நம் கண்ணனைத் துயில் எழுப்புவாயாக.



அறிதுயிலன்றோ. அவனிடம் தாமஸத் தூக்கம் இல்லையே. எனவே எழுப்புவதும் பாவமில்லையே என்றெல்லாம் உணர்ந்து பேசுவதும் சிறப்பே.

இப்பாடலில் ஸ்ரீஆண்டாளைப் போலவே வைணவத்தின் ஆணிவேர்களாகிய கருத்துக்களைக் கூறுகின்றார். கீதையில், "மாம் ஏகம் சரணம் வ்ரஜ" என்ற கண்ணனின் உபதேசப்படி, முழுச் சரணாகதியே பரமபத உபாயமாகும் என்றபடியே இரு கோதைகளும் காட்டித் தருகின்றனர். இங்கு வைணவ ஆசாரியர்கள் பல சரணாகதிகளின் உயர்வு கூறிவிட்டனர். இவற்றுள் பாகவத சரணாகதியை நன்கு விளக்கி விட்டனர் இருவரும். வாயிற்காப்போனாகிய பாகவதனிடம் சரணாகதி செய்து விட்டனர். அடுத்த பாடலில் ஆசார்ய சரணாகதி பேசப்படுகிறது இருவராலுமே.

## பாவைமொழி - 17

**வாரி வழங்குகின்ற வள்ளலே நந்தனே**
**மாரி மனமுடைய மங்கை யரசியே!**
**பாரில் பலவான் பலராமச் சேடனே!**
**பாரளந்தோன் கண்மலரச் செய்.**

சந்தக்கவியார் உரை :

நந்தகோபன், யசோதை, பலராமன் என்ற ஆசார்ய சரணாகதியே இங்கு பேசப்படுகிறது இருவராலும்.

வள்ளல் நந்தகோபனும், யசோதைப் பிராட்டியும், மூத்தவரான சேடன் அவதாரமும் ஆகிய பலராமனும் ஆகிய மூவருமன்றோ ஒப்பிட முடியாத பரமபதச் செல்வனாகிய கண்ணனை இவ்வுலகிற்கு, வளர்த்து ஆளாக்கித் தந்தவர்கள்.

இம்மூவருமே ஆசார்ய நிலை பெற்றவர்கள், இவர்களை நோக்கி, "பாரளந்தோன் கண்மலரச் செய்" என்று வேண்டுகிறார்கள்.

வேதம் கூறிய வாமன திரிவிக்ரம இரு அவதாரங்களை ஒரே காலத்தில் எடுத்துத் தேவர் முதலியவர்களையே காத்து ரக்ஷித்தவனை தம் உறவாகவும், வளர்த்துதவியதால் ஆசார்ய ஸ்தானமும் பெற்றவர்கள், இவர்கள் இயற்கையிலேயே தினமும் திருப்பள்ளியெழுச்சி பாடி, அன்போடு எழுப்ப வல்லவர்கள். கண்ணனும் அன்புப் பார்வையோடு கட்டுப்பட்டு எழுவான். ஆதலால் இவர்களைச் சுட்டி எழுப்ப வேண்டுவது ஆசார்ய சரணாகதியே.

பொருள்:

வாரி வழங்குகின்ற வள்ளல் பெருந்தகையான நந்தகோபனே! மழையின் குளிர்ச்சியையொத்த மனமுடையவளும், மங்கையர்க்கெல்லாம் அரசியானவளுமாகிய யசோதா அன்னையே! ஆதிசேடனின் அம்சமும் உலகில் பலவானும் ஆகிய பலராமரே! இவ்வுலகை அளந்தவன் கண்களை மலரச் செய்து துயில் எழுப்புவீராக!



## பாவைமொழி - 18

**மாலனின் மார்பில் மறுவா யுறைந்தவளே**
**காலைக் கதிரவனாய்க் கோழிகள் கூவலிடப்**
**பக்தியால் நாங்கள் குயிலெனப் பாடிநின்றோம்**
**தக்க தருணம் எழுப்பு**

சந்தக்கவியார் உரை :

இந்தப் பாடல் கோதை கூறாத மாலாக் கோதையின் மலர். இது முதல் மூன்று பாசுரங்களை நப்பின்னைப் பிராட்டியின் மேல் பாடி, மஹா லக்ஷ்மியைக் குறிப்பிடவில்லை ஸ்ரீஆண்டாள். ஏனெனில் அது தன்னையே பாடியதாகும். மஹாலக்ஷ்மியின் அம்சமாதலால். மஹாலக்ஷ்மியின் மீது சரணாகதி தத்துவத்தைக் கூறாவிடினும் அகலகில்லேன் இறைப் பொழுதும் என்று மாலின் மார்பில் என்றும் உறைபவளான மஹாலக்ஷ்மியை நிறைவில் கூறிய பகவான் சரணாகதியிலேயே அடக்கிக் கூறுகிறார்..

ஆனால் இக்கோதா மாலா பெண்களிற் சிறந்த பகவானுக்குச் சமமான லக்ஷ்மிக்குக் காலத்திற்கேற்றபடி மதிப்பளித்து பெண்ணுரிமையை நிலைநாட்டுகிறார். திருமாலின் மார்பை விட்டு அகலாதவள் என்பது எல்லாரும் அறிந்ததே. பிரம்மசாரியான வாமன அவதாரத்திலேயே மார்பை போர்த்தி மூடி வந்ததாக உபநிஷத்துக்கள் முழங்கியிருப்பதால் கணமும் பிரியாதவளே. எல்லா அவதாரங்களிலும் கூட அவதரித்தவளே. எனவே பெருமாளுக்கே பெருமை சேர்க்கும் இம்மார்புக் குடியிருப்பைக் கூறாதிருக்க முடியுமா.

ஆதலினால் இவளையும் அழைத்துக் கோழி கூவின. நாங்கள் பக்தியால் குயிலாகக் கூவுகிறோம்.எல்லா ஜீவராசிகளிடமும் பெருமாளை விடக் கருணை காட்டும் தாயே!. பகவான் கண்ணனை எழுப்பி விடு என்று அவன் மார்பிலிருக்கும் தாயாரிடம் சரணடைகிறார்கள் என்றது புதுப் பாவையேயாகும்.

காகாசுரனையும் மன்னித்துக் காத்தவளாயிற்றே. எனவே "கோழி, குயில் என்பன ஆய்ச்சியர் நாங்களே!. கருணை காட்டு!" என்கிறார் காலைச் சூரியன் போல நன்கு வெளிப்படுத்திக் கொள்ளும் கோழிகள் என்றதும் சிறப்பே. இதுவே என்றும் புருஷகாரம் (சிபாரிசு) செய்யும் தாயாரிடம் கொண்ட சரணாகதி. இதைக் கேட்ட அறிதுயிலோன் எழாமலிருப்பானா என்பதறிந்தே கூறியது அழகே.

பொருள்:

திருமாலின் மார்பில் மறுவாய் உறைந்த திருமகளே! காலைக் கதிரவன் தாங்கள் தானென்று கோழிகள் கூவுகின்றன. அவன் மேல் கொண்ட பக்தியால் நாங்கள் குயில்கூட்டம் போலப் பாடி நின்றோம். இதுவே அவனை எழுப்பச் சரியான நேரம். எழுப்புவாயாக!



## பாவைமொழி - 19

பஞ்ச சயனத்தில் பாவை மடிமீது
நெஞ்சார்ந்த அன்பில் நிலைத்த திருமகனைக்
கொஞ்சம் எழுப்பிவிடு கோதையர்நாம் வந்துள்ளோம்
மிஞ்சுமோ மீதிப் பொழுது

சந்தக்கவியார் உரை :

இப்பாடலிலும் தாயார் மஹாலக்ஷ்மியிடமே எழுப்பிவிடக் கூறியது தாயாரின் மூத்த உரிமையால் நப்பின்னையும் விட்டுக் கொடுப்பாள். வேறு எவராலும் இத்தகு சயனக் கோலத்திலும் எழுப்பிவிட இயலுமா என்பதறிந்து மீண்டும் தாயார் சரணாகதியைத் தப்பாத பலன் வேண்டிச் செய்வதாகக் கூறியது இவரின் புதுப் பாவையாகும்.

இவ்விடத்து ஆண்டாள் பாசுரத்திற்குச் சிருங்கார ரசத்தை ஆசார்யர் பலரும் பிழிந்து தந்துள்ளனர்.

ஸ்ரீ அழகியசிங்கர் (44ஆம் பட்ட எம் ஆசாரியர்) தள்ளாத வயதிலும் அழகாகச் சிருங்காரத்தை வெளிப்படுத்தியதை அவர் பாவை வியாக்யானத்துள் கண்டுணர்க). எனவே எழுப்ப அரிதான இந்நிலையிலும் மகாலக்ஷ்மியின் அம்சபூதையான நப்பின்னையிடமிருந்து எழுப்ப ,தாயார் ஒருவராலேயே முடியும் என்பதறிந்து தாயார் சரணாகதியே உடனடிப் பலன் தரும் என்ற வைணவ சித்தாந்தத்தை நன்கு நிறுவி விட்டார் புதுப் பாவையில்.

இரவுப் பொழுதை நப்பின்னை கொள்ளட்டும். அதுபோகப் பலருக்கும் உள்ள பொழுதுகளில் இக்காலைப் பொழுதில் எங்களுக்கும் மிஞ்சும் பொழுதே போதும் என்ற ஆய்ச்சியரின் பரந்த உளத்தைக் கூறி, ஸ்ரீ ஆண்டாளைப் போலத் தன்னல நோக்கமின்றி இறைவன் அனைவருக்கும் பொது என்பதையும் உணர்த்தினார்.

பொருள்:

திருமகளே! பஞ்சசயனத்தில் நப்பின்னை மடிமீது தலை வைத்துப் படுத்துறங்கி அவன் அன்பில் நிலைத்திருக்கும் திருமகனைக் கொஞ்சம் எழுப்பி விடு! பெண்கள் இங்கே அவனைக் காண வந்துள்ளோம்.. ஆனாலும், அவள் அன்பில் திளைத்தாடுபவனின் பொழுதுகள் எங்களுக்கு மிஞ்சுமா?



## பாவைமொழி - 20

மாயோன் மணமகளே! மாதரசி நப்பின்னாய்!
தீயோ ரிடத்திலே தீங்கு புரிபவனைத்
தூயோனைச் சற்றே துயிலெழுப்பித் தா!விசிறி
கையோடு கண்ணாடி யும்

சந்தக்கவியார் உரை :

மேலும் பரமபத நீளாதேவியின் அவதாரமான நப்பின்னைப் பிராட்டியிடமும் சரணாகதி செய்வதாக இப்பாடலின் மூலம் அறிகிறோம். இம்மானிடப் பிறப்பில் நப்பின்னையையடைய கொல்லேறு தழுவியவனன்றோ கண்ணன்.

இவன் உகப்புக்கு உகப்பான இவளிடம் சரண் புகுந்தால் நம் நோன்பு நிறைவடையும் என்று மாயோனாகிய கண்ணனின் மணம் மிக்க நப்பின்னையே!

நல்லவரைக் காத்துத் தீயோரை அழிக்கவே அவ்வப்பொழுது அவதாரம் எடுப்பேன் என்ற கீதா வாக்கியத்தானை, தூயவனைத் துயிலெழுப்பி அவனையும் எங்களுக்காக விட்டுக் கொடுப்பாயாக! என்று புருஷகாரத்துக்கு மற்றொரு தேவியிடமும் முறையிட்டுச் சரண் புகுகிறார்கள்.

மேலும் நோன்புக்குரிய வியாஜ்யங்களானவற்றையும் கேட்பதால், எல்லாம் நாம் செய்யவில்லை. அவர்கள் செயலே என்று ஆணவம் முதலியன விட்டுவிட்டு உண்மையான சரணாகதியை நிரூபிக்கிறார்கள்.

முனிவர், தவசிகளை விடவும் இச்சிறுமிகள் உலகப் பொருளின்பங்களை அனுபவிக்க ஆசையின்றி, கண்ணனே பேரின்பம் என்று உணர்ந்து சரண் புகுந்ததால் "உலகீர்! இளமையிலேயே கண்ணனிடம் பற்று வையுங்கள். அவனே மாயோன்! தூயோன்! அவன் திருவடியடைவதே பேரின்பம்" என்று காட்டுகிறார்கள் என்று இம்மாலாவும் அறிவுறுத்துகிறார்.

பொருள்:

மாயவனான கண்ணனின் மணமகளே! மாதரசியே! நப்பின்னாய்! தீயோரை அழிப்பவனை, தூயவனைச் சற்று துயிலெழுப்பிப் பின் பரிசளிப்பாய். என் மமதையை அகற்ற விசிறியும், ஆத்ம ஸ்வரூபத்தைக் கண்ணாடி போலக் காட்டக் கண்ணாடியும் தா.



## பாவைமொழி - 21

கொண்ட கலனிடத்துக் கொள்ளும் பசுப்பால்போல்
கொண்ட எம்முளத்தைக் கொள்ளட்டும் பாலன்பே
உண்ணும் உணவும் பருகும்நல் நீரும்நீ
கண்ணா கலைவாய் துயில்

சந்தக்கவியார் உரை :

இப்படிப் பல பாடல்களில் சரணாகதியைப் பண்ணியவர்கள் "எல்லாவற்றையும் விட்டுவிட்டு என்னிடமே சரண் அடையுங்கள். உங்கள் மோக்ஷத்திற்கு உத்தரவாதம் தருகிறேன்" என்ற கண்ணனே கூறியபடி, கண்ணனை எல்லாரையும் போன்ற மானிடன் என்று எண்ணாமல் அவனே பரம்பொருள். அவனே எல்லாமும். எல்லாருமாய் இருப்பவன். எல்லாரிடமும் அந்தர்யாமியாக, பரமாத்மாவாக நிறைந்தவன். எங்கும் வியாபித்திருக்கும் மஹாவிஷ்ணு.

அவனே வேதமுதல்வன். அவனில்லாத பொருளில்லை என்ற ஆழ்வார்களைப் போன்றே, உண்மை தெரிந்து தெளிந்து, அவனிடமே சரணாகதி என்ற ப்ரபத்தியைச் செய்கிறார்கள்.

இப்படி முறைப்படி, பாகவத, ஆசார்ய, தாயார், பகவான் போன்றவரிடத்துச் செய்யும் சரணாகதியே வைஷ்ணவத்தின் ஆணிவேர். இத்தகையோர்க்குப் பரமபதமே ஏற்ற இடம் என்பதை உணர்ந்த யோகியர் நிலைகொண்ட இவ்வாய்ப்பாடிச் சிறுமியர் வழியே காட்டிய கோதையை ஒட்டியே நம் மாலாக்கோதையும் பாடல்களை வகுத்தளித்ததும் போற்றுதலுக்குரியதே.

எனவே கண்ணா உன்னை அறிந்தோம் விரைந்து எழு. எங்களைக் கடைத்தேற்றுவாய் என்றனர். ஆய்ப்பாடி வள்ளல் பெரும்பசுக்களின் பால் பாத்திரம் முழுதும் நிரம்பி வழிவதைப் போல, கொள்ளும் பாத்திரங்களாகத் தோன்றிய ஆயர்களின் உள்ளே உன் கருணையாகிய அன்புப்பால் நிறையட்டும். இதைவிட வேறென்ன வேண்டும்.

பொருள்:

இருக்கும் பாத்திரத்தில் முழுவதுமாய் நிறையும் பசுவின் பால்போல, எம் உள்ளத்தை உன் அன்பால் நிரப்பி விடு.. உண்ணும் உணவும் பருகும் நல்நீரும் நீயே.. கண்ணனே! தூங்காது எழுந்திரு.



## பாவைமொழி - 22

**கர்வம் தொலைத்துந்தன் காலடியில் நிற்கின்றோம்**
**சர்விமும் நீயே சடுதியில் கண்மலர்வாய்**
**சந்திரனும் சூரியனும் சேர்ந்தமைந்த கண்ணா**
**உந்திருப்பார் வையே உவப்பு**

சந்தக்கவியார் உரை :

இதுவும் கண்ணனிடம் சரணாகதி பண்ணுவதே. அவனைவிட அவனுடைய அவயவங்களைப் போற்றிச் சரணடைந்தாலே எளிதில் மோக்ஷமடையலாம் என்பதே உண்மை. ஆனால் இதற்குமுன் நம் மலங்களில் போக்கற்கரிய ஆணவ மலத்தை அகற்ற வேண்டும். பெரியஞானியர் போன்றோரிடமும் இம்மலம் அகல்வதில்லை. "நான்" என்று கூறுகின்றவர்களைவிட, "அடியேனே செய்தேன்" என்ற போது "ஒலிக்கின்ற குரலொலியே" ஆணவம் அகலாததைக் காட்டிவிடும்.

ஆதலின் ஆணவம் அகற்றினாலேயே இறைவன் காலடியில் நிற்பதை உணரலாம் எல்லாம் அவனே என்ற வேதகோஷப்படி உணர்ந்து அவனையே சரணாகப் பற்றுவர் சிலர். மற்றும் சிலர் அவன் அடியைச் சரண் புகுவர். வேறுசிலர் அவன் அபயஹஸ்தத்தைச் சரண் புகுவர். இங்கு கண்களைச் சரணடைகிறார்கள். இக்கண்களே சூரியனும் சந்திரனுமாகும்.

இக்கண்களின் கடாக்ஷமே இவர்களின் மோக்ஷத்திற்கு வழிவகுக்கும். அவனின் சூரியக் கண் பாப, விரோதிகளைச் சுட்டழிக்கும். மற்றொரு சந்திரக் கண் அருளைச் சுரந்து மேலேற்றி விடும்.

இக்கண்களின் குறிப்பினால், நல்லாத்மா மரித்தவுடன் அர்ச்சிராதி மார்க்கமாக இவ்விரு நித்யசூரிகளே பரமபதத்திற்கழைத்துச் செல்வர். அதாவது சூரியசந்திர அதிதேவதைகளே மோக்ஷ உலகிற்கு அழைத்துச் செல்கின்ற ஆதி வாஹிகர்கள்.. எனவே கண்ணனின் கண்களிடம் சரணாகதி செய்கின்றனர். எனவே விரைவில் கண் மலர்ந்து கடாக்ஷிப்பாயாக. இவன் திருப்பார்வையே என்றும் உவப்பைத் தரும் மோக்ஷத்திற்குக் காரணமாகும் என்பதைக் குறிப்பால் உணர்த்தியதும் சிறப்பே.

பொருள்:

தான் என்னும் கர்வம் தொலைத்து உன் காலடியில் நிற்கின்றோம். அனைத்தும் நீயே எனச் சரண் அடைந்திருக்கிறோம். விரைந்து நீ விழித்திடுவாய். சந்திரனும், சூரியனும் ஆகிச் சேர்ந்து அமைந்த கண்ணனே! உன் ஒளி பொருந்திய திருப்பார்வைக் கடாக்ஷமே எங்களுக்கு மிகப் பிரியமானதாகும்.



## பாவைமொழி - 23

**தீயோரைத் தீவிழித்த தெள்ளிய சிங்கமே!**
**மாயோனே! மாதவா! மன்றில் எழுந்தருள்வாய்!**
**சீரிய சிம்மா சனத்தி லமர்ந்துநீ**
**நேரில் நிறைப்பாய் பறை.**

சந்தக்கவியார் உரை :

இங்கு பெருமாளைப் போற்றுகிறார்கள். சரணாகதி செய்த பிறகும் உடனே மோக்ஷம் கிடைப்பதில்லை. இப்பிறவியில் மீதமுள்ள காலங்களை பிராரப்த கர்மங்கள் படியே ஒவ்வொரு ஜீவாத்மாவும் அனுபவித்தே ஆகவேண்டும் என்றே கீதையில் கண்ணன் தெளிவாக்கி விட்டான்.நான் இதில் குறுக்கிட மாட்டேன் என்கிறான். ஆதலின் இப்பிறவியறும் வரை சமப்ரக்ஞையுடன் யோகியர் போல வாழ்வர். இக்காலத்தில் பரமனின்புகழ் பாடுவதைவிட அவர்களுக்கு வேறென்ன இருக்கிறது.

அதனால் தோத்திரம் செய்தே வாழ்வர். இதைப் போலவே ஆயர்களும் அவன் புகழே பாடுகின்றனர். அவன் நடை சிங்கம் போன்றது என்றது ஆண்டாள் வாக்கு. பெரியாழ்வார் போன்றவர்களும் அவனைச் சிங்கமென்றே அழைப்பர். நடையழகைக் குறிப்பிடாமல் இதனை மாற்றிய மாலா, சிங்கத்தின் சீற்றம் எனக் கூறுகிறார்.

அவனையடையத் தடைகளாகிய பகையழிப்பதில் முன்னிற்பது சிங்காவதாரமே. வேறு விலங்குகளைக் குறிப்பிடாதது, கீதையில், "ம்ருகாணாம் ச ம்ருகேந்த்ர" என்ற கண்ணனின் கூற்றுப்படியே விலங்குகளில் அவன் சிங்கமாக இருக்கிறான் என்றதை உட்கொண்டே இருவரும் குறிப்பிட்டனர். ஆனாலும் சிங்கம் என்றவுடனேயே, குழந்தை பிரகலாதனுக்காக இரங்கி அவதரித்த நரசிங்க நினைவே வந்தது.அதைப் போல இரங்கி, கடும் கசிபு போன்ற பகையழித்துக் காத்த சிறந்த அவதார நினைவே. சரியான உபமானமாக்கினார். ஆயர்களும் ப்ரகலாத அன்பினால் அவனைத் தவிர வேறு நினைவின்றி இருக்கும் காரியத்தை ஆராய்ந்தால் இவர்களுக்கு மோக்ஷமடையக் காரணமான நோன்பிற்குரியன தந்து விடுவான். மறுக்க மாட்டான் என்றே சிங்க உதாரணம் கூறினார்.

சீரிய சிம்மாசனத்தமர்ந்தால் இராஜநீதி தவறாது அனைவருக்கும் ஏற்ற நீதி பரிபாலனம் செய்யும் அரசரைப்போல, இங்கும் ஆயர்கள் இத்தனை காலமும் அவனருளுக்காக எத்தனை பேரிடம் சரணாகதி செய்து காத்திருந்தனர் என்று அறிந்து இவர்கள் விழைவன சரியான காரியம் எனப் பகுத்துணர்ந்து பறை தருவன் என்று கூறியதழகே.

பொருள்:

தீயோரைத் தீ என விழித்து வதம் செய்த தெள்ளிய சிங்கமான நரசிம்மா !! மாயவா ! மாதவா ! இந்த இடத்தில் எழுந்தருள்வாய். சீரிய சிம்மாசனத்தில் அமர்ந்து நீ நேரில் நாங்கள் விரும்பிய பொருள்களைத் தந்திடுவாய்.



## பாவைமொழி - 24

**மண்ணளந்து விண்ணளந்து மாதுயிர்க்கக் கல்லளந்து**
**கண்ணனாய்க் காலால் சகடம் உதைத்துப்பின்**
**குன்றைக் குடையாக்கிக் கோபால னாய்நின்றான்**
**பொன்னடி பூவடி போற்று**

சந்தக்கவியார் உரை :

இப்பாடல் கோதையைப் போலவே கூறிச் சில லீலைகளைப் பேசினார். ஏன் இரு மாலைகளும் உலகளந்ததைக் குறிப்பிடுகிறார்கள். சென்ற பாடலில் ஆண்டாள் நரசிங்காவதாரத்தைக் குறிப்பிடவில்லை. சிங்க நடை உவமையே கூறினாள். ஆனால் இக்கோதா மாலா நரசிங்காவதாரத்தைக் குறிப்பிட்டதழகென்றேன். பிரகலாத பக்தி போன்ற ஆயர் பக்திச் சிறப்புக் கூற. அதன் தொடர்ச்சியாக இங்கு வாமனாவதாரமும், திரிவிக்ரமாவதாரமும் பேசப்படுகிறது இம்மாலாவின் நுட்ப அறிவால்.

மகாபலிச் சக்ரவர்த்தி ப்ரகலாதனின் பேரன். இவர்களுக்காகவே இருஅவதாரங்களும் செய்தான் எனில் இருவரும் எத்தகு பெருமையுடைய பக்தர்கள். ஆனாலும் பலியின் தவறு இந்திர விரோதம். தேவலோக அபகரிப்பு. இந்திரனுக்காகப் பலியைத் தண்டிக்க வேண்டும். ஆனாலும் தண்டிக்காது பாதாள லோகமாளும் உரிமையே கொடுத்துச் சிறப்பித்தான்.

விஷ்ணு புராணத்தில் பாதாள லோகம், தேவ லோகத்திலும் சிறந்ததென்று பராசர முனிவரால் பேசப்படுகிறது. வெளிப் பார்வைக்குத் தேவருலகை அபகரித்ததை மீட்டுக் கொடுத்துத் தேவேந்திரனுக்கு உதவுவது போல நடந்தாலும் உள்நோக்கத்தில் அதனைவிடச் சிறந்த பாதாளலோகப் பரிசளித்து விட்டான். ஏன்?

தன் அடியாரெனில் அவர்களின் தவறுகளைப் பொறுத்துக் கொள்பவனே இப்பக்தவத்ஸலன். இராமவதாரத்தில் சுக்ரீவனின் தவறுகளைப் பொறுத்துத் தண்டிக்காமல் இராஜ்யாதிகாரம் வழங்கியதை வான்மீகியும் குறிப்பிட்டுள்ளார். (இலக்குவன் முதலியோரும் சினந்து தண்டிக்க விரும்பியும்) இதனையெல்லாம் குறிப்பாகக் கூறு முகத்தான் பாடல் அமைத்தது அழகே.

காரணம் நான்கு அவதாரங்களையே பரமன் ஸ்ரீநாராயணன்

பொருள்:

வாமனனாய் முதலில் மண்ணளந்து பின் விண்ணளந்தாய். இராமாவதாரத்தில் கல்லாய்க் கிடந்த அகலிகையை உயிர்ப்பிக்கக் கல்லை அளந்தாய். கண்ணனாய்க் காலில் உரலை உதைத்துப் பின் குன்றைக் குடையாக்கிக் கோபாலனாய் நின்றாய். இத்தகைய செயல் புரிந்த அவனின் பூப்போன்ற பொன்னடிகளைப் போற்றுவோம்.



முதன்முதல் ஊழியில் படைக்கும்போது செய்யப் போவதாகச் சங்கல்பித்துக் கொண்டான் என வேதம் முழங்குகிறது. அவை. வாமனாவதாரம், நரசிங்காவதாரம், இராமவதாரம், க்ருஷ்ணாவதாரம் என்பனவே. எனவே இப்பெருமாள் உகந்த இவ்வவதாரங்களில் முதலில் நரசிங்க, வாமனாவதாரத்தைக் குறிப்பிட்டது சத்திய வாக்காயமைந்ததே. அவனன்றோ எழுத வைக்கிறான்.

(ஸ்ரீஆண்டாள் நரசிங்காவதாரம் எனக் குறிப்பிடாமல் சிங்கநடை வர்ணித்தாள். )

மண்ணளந்து விண்ணளந்து எனத் தெளிவாக கூறியது (ஸ்ரீஆண்டாள் உலகளந்த எனப் பொதுவாகக் கூறினாள்) ஆநிரைகளுடன் பசுக் குணத்துடன் வாழும் ஆயர்களுக்கும், ஆய்ப் பாடிக்கும் நீரானது எத்தகைய இன்றியமையாததைப் போல மண்ணுக்குக் கங்கையை வரவழைத்த திரிவிக்ரம அவதாரத்தைச் சிறப்பிக்கவேயாகும். (பகவானின் திருவடி எல்லா உலகையும் தாண்டி இறுதியாகவுள் சத்திய லோகத்தை அடைந்ததும் பிரமன் தன் தந்தையின் திருவடி தேடி வருகிறதே என்று கங்கை நீரால் திருவடி பரிசுத்தி செய்தான். அதுவே கங்கை மண்ணுக்கு வரக் காரணமாகியது.)

மானுடம் தழைக்க வைக்கும் மாதா. கண்ணனின் காலடிப் பெருமை யையும் அடக்கித் திருவடியைப் பற்றி உய்யலாம் என்று காட்டினார். அகலிகை சாப விமோசனம் ஆண்டாள் கூறவில்லையிங்கு.கல்லாயிருந்தும் இத்தனை காலம் தவம் செய்ய தவத்திற்குப் பரிசுதான் திருவடிப் பேறு என்று காட்டினார். எனவே சேதன அசேதனத்துளும் நிறைபவன் பரமனே என்ற விசிட்டாத்வைதத்தையும் நிலைநாட்டினார். பறை கிடைப்பது உறுதியாச்சே.

இப்படி மேலும் மேலும் எழுத வைத்ததும் இந்த உடுப்பி கிருஷ்ணனே. துவாரகையிலிருந்து வந்தவனின்இவ்வூரே ஆய்ப்பாடியாயிற்று. அதனாற்றான் மற்ற க்ஷேத்திர க்ருஷ்ணனின் கையில் வெவ்வேறு ஆயுதங்கள்.

இந்த இடத்தில் நான் கண்டது அவன் கையில் ஆய்ச்சியரின் கையை விட்டு நீங்காத மத்தே.மத்தாயுதமுடைய ஆயர்பாடியானதே உடுப்பி. கண்ணனின் வெண்ணெய் விருப்பம் பாரறிந்ததே. அதைக் கடைந்து தரும்மத்தோடு காட்சியளிக்கும் இவ்வுடுப்பியையும் போற்றுவோம்.



## பாவைமொழி - 25

ஓரிடம் தோன்றிமற் றோரிடம் உட்புகுந்தாய்
சேரிடம் சேர்ந்தபின்னே செந்தீயைக் கம்சனுற்றான்
தீராத செல்வமெனத் தெள்ளியவுன் அன்பெமக்கு
வாராது வந்து வழங்கு

சந்தக்கவியார் உரை :

இங்கும் கண்ணனின் செயல்களே கூறப்படுகின்றன. கண்ண சரணாகதியே. கீதையின் சாரமே இப்பாடல். எப்பொழுதெல்லாம் சாதுக்க ளுக்கு நலிவேற்படுகிறதோ, அப்பொழுதெல்லாம் அவதரித்துத் தீயோரை அழித்துத் தர்மத்தைக் காப்பேன் என்றபடி அவதரித்துக் காத்தவனன்றோ. இக்காலமன்றோ அரக்க குணத்தில் மிகக் கொடிய கம்சன் உள்ள காலம்.

தன் தங்கை தேவகியையும், நண்பனும் மாப்பிள்ளையுமான வசுதேவனையும் கொடுமைப்படுத்தியதைப் போன்று இதுவரை வேறு எந்த அசுரன் நடந்து கொண்டிருக்கிறான்? தளைபூட்டிச் சிறையடைத்தான் பெண்மையையே. சொல்லொணாக் கஷ்டமடைந்தனரே. பிரசவ காலத்திலும் விட்டு வைக்கவில்லையே. மற்ற அசுரரிராக்கதர்கள் உறவினரிடம் இப்படி நடந்து கொண்ட சரித்திரமில்லையே.

தங்கையின் பிறந்த சிசுக்களைச் சுவரில் மோதிக் கொல்லும் அளவிற்கு இத்தனை யுகங்களில் அசுரர் இருந்ததில்லையே. இத்தகையோனை வேறு எவர் அழிக்க முடியும். எனவே இவனை அழித்த இவ்வவதாரமே ஏற்றம் படைத்தது. இதற்காகப் பகவானுமே பிறந்தபோதே தாயைப் பிரிந்து துன்பப் பட்டாரே. இத்தகு கொடூர அரக்கனின் வயிற்றில் நெருப்பென்ன நின்றான் என்ற ஆண்டாளைவிட, நெஞ்சில் நெருப்பேற்படுத்தினான். உறக்கத்திலும், விழிப்பிலும் ஆகிய எந்நேரமும் கோபமும் பயமும் கொண்டிருக்கக் காரணமாயினான் என்று நெஞ்சாகிய மனத்தில் என்றது சிறப்பே.

எமக்குரிய பறை தருவாய். அவை வெளிப்படையாகக் கேட்ட பொருள் களில்லை. உன் அன்பே செல்வத்திலெல்லாம் மேம்பட்ட செல்வம். திருமகளின் தீராத செல்வத்திலும் மேலான உன் அன்புச் செல்வத்தையே நாங்கள் பாடிக் களிப்போம். அத்திருமகளும் உன்னையே செல்வமாகப் பெற்றவளன்றோ. எனவே நீயே எங்களின் பறை. வந்தளிப்பாய்.

பொருள்:

பிறந்தது ஓரிடம்; வளர்ந்தது ஓரிடம். எந்த இடத்தில் நீ சேர்ந்து வளர வேண்டுமோ, அங்கு சேர்ந்தபின், உன்னை விட்டு விட்டோமே என்ற கோபத் தீயைக் கம்சன் அடைந்தான்.. பெருமையுடைய என் கண்ணா! தீராத செல்வம் போல உனது மேன்மையான அன்பினை அங்கிருந்தே எமக்கு வழங்கு.



## பாவைமொழி - 26

ஆலிலை மேலே அகிலம் சுமந்தவா
பாலன்ன யொத்தவெண் பாற்சங்கு டன்கொடியும்
பாடிப் புகழப் பறைகட்டு தீபமும்
நாடி வருகிறோம் நல்கு

சந்தக்கவியார் உரை :

இருவரும் ஒன்றிப் பாடிய பொருளும் ஒன்றே. உறுதியாகக் கண்ணனருள் உண்டு என்ற த்ருஷ்டி பெற்ற ஞானியரொத்தனர். பறையாகக் கேட்டனவும் ஒன்றே. வழிவழியாக இவ்விரதமிருக்கும் பெரியோர் கேட்பனவே ஒன்றே. இவை தற்போது கோதை நாச்சியாருக்குத் தேவையில்லை. ஆனாலும் எல்லா ஜீவராசிகளும் உய்வடையவே கேட்கிறார்கள். (மாலாவும் இதைக் குறிப்பிட்டார்.)

இவர்கள் பரம்பொருளை உணர்ந்தவர்களே. ஒவ்வொரு ஊழி முடிவிலும், பிரமன் முதல் அனைத்துயிர்களும், உலகங்களும் ஒடுங்கு மிடமாக ஆலிலைக் கண்ணனின் வயிறுள்ளதை அறிவரே, "நாராயண பராவேதா"என பாகவத புராணம் கூறுகிறது. நாராயணனே வேதங்களின் முடிவு. "வாசுதேவ பராவேதா" என்றும் கூறி வாசுதேவனாகிய கண்ணனே வேதங்களின் இலக்கு என்கிறது. கடோபநிஷத் ,"ஸர்வேவேதாயத்பதம் ஆமனந்தி" அதாவது அனைத்து வேதங்களும் நாராயணனையே கூறுகின்றன.

கீதை அத்.15.19 ஆம் ஸ்லோகத்தில், "யோமாம்ஏவம்அஸம்மூட: ஜானாதிபுருஷோத்தமம்." அதாவது என்னையே மிகவும் உயர்ந்தவன் என்றறிபவன் வேதஞானத்தை முழுவதும் அறிகிறான்.

ஆதிசங்கரர், இராமானுஜர், மாத்வர் போன்ற ஞானியர் அனைவரும் நாராயணனே பரம் என்று ஏராளமான இடங்களில் கூறியதைக் கூறி நிறுவி விட்டனர். ஆதலினால் இவ்வாலிலையைக் கூறி வேதம் போல முழங்கி விட்டனர் இவ்விரு கோதாக்களும்.

இத்தகையோருக்குப் பறை என்ற வியாஜ்ஜியம் தேவையில்லை. வளர்ச்சி பெறாத கர்மத் தளைகளில் சிக்குண்டவர்களும் உய்வு பெறவே நோன்புக்குரிய பொருள்களைக் கேட்கின்றனர்.

பொருள்:

ஆலிலை மேல் பள்ளி கொண்டு எல்லா உலகங்களையும் தன்னுட் கொண்டு சுமந்தவனே. மார்கழி நீராட்டத்திற்குப் பெரியோர்கள் அனுஷ்டித்து வந்ததுபோல, நாங்களும் அனுஷ்டிக்க உலகம் நடுங்க ஒலிக்கும் பால்நிறப் பாஞ்சசன்னியம் போன்ற சங்குகளும், மிகப் பெரிய பறைகளும், அழகிய விளக்குகளும், கொடிகளும் வேண்டும். நாங்கள் உன்னை நாடி வருகிறோம். இவையனைத்தும் எங்களுக்குத் தந்தருள வேண்டும்





## பாவைமொழி - 27

**வாரா திருப்போரை வாகாய் வசம்செய்து**
**தாராய் தனதான்யம் தங்க அணிகலன்கள்**
**பாவை விரதமிங்கே பாங்காய் நிறைவுபெறத்**
**தேவைநெய்யி டைப்பொங்கல் தேன்**

சந்தக்கவியார் உரை :

இப்பாடல் ஆணவத்தினால், தன் அன்பராகாமல் அருகே வராத ஆத்மாக்களிடத்தும், இவர்கள் மூலமுணராமல் திசைமாறிப் போகிறார்களே என்று கவலை கொண்டு அவர்களையும் தன் வசமாக்கியருளும் தயாபரனே.

நாங்கள் அப்படியின்றிக்கே உன்னோடு கூட மனமுள்ளவர்களே. உன் கடாக்ஷம் பெற்று உய்ந்துவிட மாட்டோமா. இத்தகு எங்களுக்கு உன் செல்வ வளங்களையெல்லாம் தந்து அழகு பார்ப்பாயே.

இப்படித் தொடக்கத்தில் விரதம் தொடங்கியபோது நாங்கள் வைராக்யத்தோடு புறக்கணித்தவற்றை இன்று பரிசாக அபரிமிதமாகத் தந்தும், எங்களோடு கூடியிருந்தும், விரதத்துக்கு வேண்டிய பறையைப் பெற்று மகிழ்வடையச் செய்பவாயே. எங்கள் விரதம் முடித்தபின் நாங்கள் பெறும் சன்மானமும் இவையேயாம்.

அன்னமே பிரம்மம் என்றபடி ஆதிப்ரம்மமான உன்னையடைந்து மகிழ்வதற்கு, முன்னேற்பாடாக சிறந்த நெய், தேன் போன்ற இனியவை பொருந்திய உணவை உன்னோடு கூடி உண்டு மகிழ அருளுவாயாக என்கின்றனர்.



பொருள்:

உன்னருகில் வராமல் இருப்போரைச் சரியாய் உன்வசம் இழுத்துத் தருவாய் தனம், தான்யம், தங்க அணிகலன்கள் யாவும். அப்படி உனக்காக இருக்கும் இப்பாவை விரதம் அழகாய் நிறைவுபெறத் தேவை எங்களுக்கு அபரிமிதமான நெய் இடப்பட்ட சர்க்கரைப் பொங்கல். அவை தேன் போன்றதே.



## பாவைமொழி - 28

**ஆயச் சிறுமீர் அறி**யாது கேட்டோமோ?
**மாயனே! உன்**மேல் மரியாதை மிக்குண்டு
**நேயம் நிறைந்த**வா நெஞ்சுறை கோவிந்தா
**தூயவெம் அன்**பில் துலங்கு

சந்தக்கவியார் உரை :

21ஆம் பாடல் முதல் தொடர்ந்த கிருஷ்ண சரணாகதியில்,

ஆயர் சிறுமிகளின் அறியாத அஞ்ஞானத்தால் கேட்டு விட்டோமோ என்று சிறிது குழம்பினர். பின் தெளிந்து

மாயம் வல்ல கண்ணா! உன் திருவிளையாடல்களை எல்லாம் இளமை முதல் கண்டும் கேட்டதாலும் செயற்கரியன செய்து வரும் உன்மேல் மிகுந்த மரியாதை கொண்டிருக்கிறோம்.

"என் பெருமைகளை உள்ளது உள்ளபடி அறிந்து பக்தி செலுத்துபவர்களே எனக்கு உகப்பானவர்கள்'' என்று கூறியவனாயிற்றே.

நாங்களும் இளமை முதல் இவற்றை அறிந்து போற்றுபவர்கள் தாமே. எனவே உனக்கு உகப்பானவர் தாமே.

எம் இதய குகாசனத்தில், எம் ஆத்மாவில் குடிகொண்ட பரமாத்மா நீயே என அறிந்து கொண்டோம். இத்தகு எங்களுக்குப் பறை தந்து உயர்த்துவாயாக என்கின்றனர்.

பொருள்:

ஆயச் சிறுமிகள், நாங்கள் அறியாது கேட்டு விட்டோமா? மாயனே! உன்மேல் மிகுந்த மரியாதை கொண்டுள்ளோம். நல்ல மனதுடையவனே! எங்கள் நெஞ்சில் உறைந்த கோவிந்தா! தூய்மையான எங்கள் அன்பில் நீ ஒளிர்வாய்.



## பாவைமொழி - 29

ஏழேழ் பிறப்பினிலும் எம்குலத்தில் உம்பிறப்பு
ஏழிலும் எம்மோ(டு) உறவின ராகவேண்டும்
மாறாத கைங்கர்யம் மாலுனக்கே யாற்றவேண்டும்
மாறாமனமருள் வாய்!

சந்தக்கவியார் உரை :

இப்பொழுது இவ்வாய்ச் சிறுமிகள் இத்தனை நாட்கள் தவமிருந்தது போலக் கடைப்பிடித்த இந்தக் காத்யாயினி விரதமென்று யமுனைக் கரையில் தவமிருந்த செயலை ஒத்த நோன்பின் பலனாகக் கேட்டது கண்ணனையடைவதே.

“காத்யாயனி மஹாமாயே மஹாயோகின் யதீஸ்வரி
நந்தகோப ஸுதம்தேவி பதிம்மே குருதேநம:”

“ஓ காத்யாயனி தேவியே! நீ மஹாமாயை. (பெருமாளின், மயக்கிச் சிக்க வைக்கும் மாயா சக்தி) மஹா யோகி, உலகின் பெண்ணினத்தின் ஒரு தலைவியாகவும் உள்ளவள். ஆயர் தலைவன் நந்தகோபனின் அருமைச் சிறுவன் ஸ்ரீக்ருஷ்ணனை எங்களுக்குக் (எனக்கு) கணவனாக அடைய வையுங்கள்” என்று விடியற்காலை உறக்கத்தையும் துறந்து, கண்ணனையே எண்ணிய ஏகாக்ரஹ சித்தத்தால் தைல தாரையாக அவன் நினைப்பிலேயே இருந்து, பலன் கிடைக்கும்போது இங்கு, எத்தனை பிறவியெடுத்தாலும் அல்லது ஏழு பிறப்பென்று சொல்லப்பட்டாலும் அத்தனை பிறப்புக்களிலும் உன் தொடர்பு அறாமல் இருக்க வேண்டும். அத்தனையிலும் உனக்குக் கைங்கர்யங்கள் செய்யும் வரமருள வேண்டும் என்கிறார்கள். பறை தா என்றதெல்லாம் ஒரு சாக்கே.உனக்கே அடிமைத் தொழில் புரிய வேண்டும். நீயே எங்கள் எஜமான்.

பிற உலகாயதப் பொருள்களின் மேல் கர்ம வசத்தால் நாங்கள் கொள்ளும் ஆசைகளை, விருப்பங்களை மாற்றி உன் ஒருவனிடத்திலேயே எம் விருப்பமிருக்கும் படி, மற்றை நம் காமங்கள் மாற்று என்றனர்.

இது தம் பயன் கருதாத மனத்தைக் காட்டுகிறது. இதுதான் வைணவத்தின்ஆணிவேர். இப்படிப்பட்டவரையே பகவான் விரும்பித் தன் உகப்புக்குரிய யோகியாகக் கருதி கர்மங்களைப் பொசுக்கிப் பிறவாநிலை

பொருள்:

ஏழு பிறவியிலும் எம் குலத்திலேயே உன் பிறப்பு நிகழ்ந்து, ஏழிலும் எம்மோடு நீ உறவினராய் இருக்க வேண்டும். என்றும் மாறாத தொண்டினை, மாலவா! உனக்கு நாங்கள் ஆற்ற வேண்டும். மாறனே! மனமருள்வாய்! (கைங்கர்யத்திலிருந்து மாறாத, நிலைத்த மனமருள்வாய்)



தந்து பரமபதத்தில் கைங்கர்ய ப்ராப்தி அருளுவார் என்பதே கீதாசாரம். இதுவே சரணாகதியின் பயன்.

ஸ்ரீஆண்டாள் தன் தந்தை பாடிய பல்லாண்டில் கூறியது போன்றே, (எந்தை தந்தை தந்தைதந்தை தம் மூத்தப்பன் ஏழ்படி கால் தொடங்கி) ஏழு பிறவியிருப்பினும் உன் தொடர்பே வேண்டும் என்று முடிக்கிறார். தந்தையாகவும் ஆசார்யனாகவும் பெருமாளுக்கே பல்லாண்டு பாடியவருமானவரின் திருமகள் என்பதை நிரூபிக்கிறாள்.

பரமபத கைங்கர்ய ப்ராப்தியைக் குறிப்பிட்டுக் கேட்காமல் எத்தனை பிறவியேற்படினும் அத்தனையிலும் உறவு ஒழிக்க ஒழியாதிருந்து கைங்கர்யத்தையே வேண்டுவதே பலன் கருதாத, வேறு பிரயோஜனம் கருதாத பக்தி.

இதனையே உலகினர்க்குக் காட்டுவதற்காகப் பூமித்தாயார் பாடுகிறார். இதிலேயே பகவானும் உகக்கிறார். "அவனைக் கொண்டு அவனது கைங்கர்யத்தை அவன் உகப்புக்காகப் பெறுவதே ஜீவர்களின் வாழ்க்கைப் பயன்" என்ற சாரமானவற்றை உலகுக்குணர்த்தினர் இருவரும்.

இதனையே பெரியோர்களும்,"காமரு சுற்றமொடு, ஒருங்குநின் அடியுறையாம் இயைந்து ஒன்று புவைகலும் பொலிக என ஏமுறு நெஞ் சத்தேம் பரவுதும் வாய்மொழிப் புலவ ! நின்தாள் நிழல் தொழுதே" என்று, முதற்பரிபாடலிலும், "இன்னும் இன்னும் எம் காமம் இதுவே" என்று பதின்மூன்றாம் பரிபாடலிலும் சங்கத் தமிழர், ஜீவன் பெறவேண்டிய பேற்றைத் தெரிவித்ததைப் போல, சங்கத்தமிழ் மாலையில் ஆண்டாளும் இப்பாடல் வழிக் கூறியதை இம்மாலாக் கோதையும் மாற்றாமல் உறுதி செய்து கூறியது முன்னைப் பிறவித் தவமே.



## பாவைமொழி - 30

**பாற்கட லாடும் பரமபத நாதனைப்**
**போற்றிப் புகழ்ந்து பிறந்த தமிழ்மாலை**
**முப்பதும் இங்கே மொழிவோர்தம் நல்வாழ்க்கை**
**எப்பொழுதும் எங்கும் சிறப்பு**

சந்தக்கவியார் உரை :

இப்படி, திருப்பாற் கடலில் பள்ளி கொண்ட பரமபத நாதனாகிய மாதவனையும், அவனவதாரக் கண்ணனையும் நோன்பிருந்து பாடிப் புருஷார்த்தத்தைப் பெற்ற இச்செய்தியை, ஸ்ரீவில்லிப்புத்தூரில் அவதரித்த பெரியாழ்வாரின் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியின் சங்கத் தமிழொத்த இப்பாமாலையை (முப்பது பாசுரங்களையும்) அனுசந்தானம் செய்பவர்கள், (இதைப் போல மாலாக் கோதையின் பாடல்கள் முப்பதையும் அனுசந்திப்பவர்கள்) இப்பிறவியிலும் (மறுமையிலும்) எல்லா நலன்களும் பெற்று, அப்பரமனின் பரமபதமும் அடைந்து கைங்கர்ய ப்ராப்தி பெறுவர் என்பதே இம்மாலையின் பலச்ருதி.

வேதமே பகவானின் மூச்சுக் காற்று. அழியாதது. அதை முழங்கிய பகவானே ஆதி கவியாவான். ரிக்வேதம் முழுதுமே பாடல்களாம் இதைப் போல அப்பரமனுடன் ஒன்றியிருந்து, அனுபவித்துக் கூறுகின்ற சத்திய வாக்கான ஸ்ரீபூமித் தாயின் இத்திருப்பாவையே (மாலாவின் மாலையுமே) "தமிழர்களின் வேதமாகும்". இஃது ஒன்றே போதும்.

ஸர்வம்ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து

"க்ருஷ்ணக்ருஷ்ணக்ருஷ்ண"

பொருள்:

பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரமபதநாதனைப் போற்றிப் புகழ்ந்து பிறந்த தமிழ்மாலை. இந்த முப்பது பாடல்களையும் மொழிவோரின் நல்வாழ்க்கை எப்பொழுதும் சிறப்பாக இருக்கக் கண்ணனை வேண்டுகிறேன்.



திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே!

திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே!

பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே!

பெரும்புதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே!

ஒருநூற்று நாற்பத்து மூன்று உரைத்தாள் வாழியே!

உயரரங்கர்க்கே கண்ணி உகந்தளித்தாள் வாழியே!

மருவாரும் திருமல்லி வளநாடு வாழியே!

வண்புதுவை நகர்க் கோதை மலர்ப்பதங்கள் வாழியே!



கண்ணனை அடைய
ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வழி.
பூமாலை.. பாமாலை இரண்டாலும்
ஜெயித்தவள் ஆண்டாள். மாலா
சம்பந்தம் இருந்தாலே கண்ணன்
அகப்படுவான் என்று முதலில் வழி
காட்டி விட்டதால், மாலா
மாதவனுக்கும் அநுக்கிரகமாகி
விட்டதோ ?!

நாழிகை நேரம் நயவுருக் காட்டிடு
என்று வேண்டுகிறார். வாசிக்கும்
நாழிகை தோறும் நயவுருக் காட்டிடும்
அற்புதச் சொல்லாடலில்...
தேர்ந்தெடுத்த சிக்கனச் சொற்களால்
வடிவமைத்த தேன் பாக்களில்...
நீங்களும் திளைக்க வரவேற்கிறேன்.

தமிழுக்கும் இறை உணர்வுக்கும்
மேன்மேலும் மாலா மாதவனின்
பங்களிப்பு இருக்க ஆண்டாள்
உகந்த அரங்கனைப்
பிரார்த்திக்கிறேன்.

நல்வாழ்த்துகளுடன்

**ரிஷபன்**

Not for Sale

தனிச்சுற்றுக்கு மட்டும்